

# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"

ரதி

சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு.

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே.

தேவாரம் - திருநாவுக்கரசர்.

யானும் தானாய் ஒழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்தென்
ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை உணர்ந்தேனே.

திவ்யப்பிரபந்தம் - நம்மாழ்வார்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே

கந்தரனுபூதி - அருணகிரியார்.

---

# பொருளடக்கம்



---

திருக்கோயில்

திங்கள் வெளியீடு

தனி இதழ்: காசு 80 ஆண்டுக் கையொப்பம்: ரூபா 10

அறநிலையப் பாதுகாப்பு ஆட்சி அலுவலகம்,
மவுண்ட் ரோடு, சென்னை-2.

# திருக்கோயில்

திங்கள் வெளியீடு

மாலை 1] விளம்பி புரட்டாசி - 1958 அக்டோபர் [மணி 1

## வாழ்த்துச் செய்திகள்

GOVERNOR OF MADRAS



RAJ BHAVAN
*Guindy, Madras-22,*
*September 17, 1958.*

### *MESSAGE*

I am happy to know that the Hindu Religious and Charitable Endowments (Administration) Department will be publishing a monthly Tamil Journal called "Thirukoil" and that the first issue will be brought out on 2nd October 1958, the day heralding the birth of Mahatma Gandhi.

Tamilnad should be justly proud of its many beautiful temples and places of worship. The great works of art and of architecture reflecting our culture and civilization, enshrined in the innumerable temples which have been raised in this part of our country will be a source of perennial inspiration to everyone. Apart from the immense religious and spiritual importance of these places of pilgrimage and centres of sanctity, the noble and awe-inspiring structures and edifices which have been constructed by our ancient rulers and philanthropic men and women serve as permanent exhibition of our sculptural wealth. Everyone will be interested to see the artistic beauty and the excellence of the carvings in these temples.

As the name of the journal denotes, I hope it will contain useful information about the various temples in Madras State and about their administration and help the pilgrims coming from different parts of the country to know more about this part of our land and the significance of these centres of pilgrimage.

I send my best wishes for the success of the journal.

BISNURAM MEDHI,
*Governor of Madras.*

CHIEF JUSTICE OF MADRAS

*September 12. 1958.*

Dear Sri Uthandaraman,

I am glad to learn that the Government sanctioned the publication of a Monthly Journal in Tamil under the auspices of the Hindu Religious and Charitable Endowments (Administration) Department. Its name "Thirukoil" is very apt and comprehensive and I presume the Magazine will be devoted not only to matters strictly religious and spiritual, but also to cultural, literary and educational topics, because it is a well-known fact that in ancient times the temple was also the centre of learning and culture. I wish the Journal all success.

Yours Sincerely,
**P. V. RAJAMANNAR.**

  

கு. காமராஜ்
Chief Minister of Madras

Fort. St. George,
MADRAS.
20-9-58

"உண்மையே கடவுள்; மக்களின் சேவையே அவனை அடைவதற்கு உரிய வழி" என்று நம் அனைவருக்கும் உணர்த்தியவர் காந்தியடிகள். அவருடைய பிறந்த நாள் அன்று "திருக்கோயிலி"ன் முதல் இதழ் வெளிவருவது மிகப் பொருத்தம்.

பகுத்தறிவு ஒன்றைப் பெற்ற காரணத்தினால் மட்டும் மனிதன் விலங்கைவிட உயர்ந்தவன் என்று கூறிவிட முடியாது. மனிதனின் உயர்வுக்கு முக்கிய காரணம் அவனுடைய பண்பாடுதான். அன்புடனும், இரக்கத்துடனும் அவன் தன்னை ஒத்த மனிதர்களிடமும் மற்ற உயிர்களிடத்தும் நடந்துகொண்ட காரணத்தினால்தான் மனிதன் உயர்வாக மதிக்கப்பட்டான். இந்த அரிய பண்பு அவனுக்கு வெறும் பள்ளிப் படிப்பினால் மட்டும் ஏற்பட்டதன்று. பள்ளிப்படிப்பு அறிவின் வளர்ச்சிக்குத்தான் துணைபுரியுமே ஒழிய ஆன்ம வளர்ச்சிக்கு அது பெரிதும் துணை செய்யாது.

ஆன்மவளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டுதான் மனிதனின் பண்பாடு மலர்ச்சி அடையும். அவ்வான்ம வளர்ச்சியை அடைவதற்கு மதநூல்களும் இறைவழிபாடும் பெரும் துணையாக இருக்கின்[illegible] இவ்வுண்மையைத் "திருக்கோயிலின்" இதழ் மக்களுக்கு நன்கு விளக்கிக் [illegible]ட்டவேண்டுமென்று எண்ணுகிறேன். மதமும், கடவுள் வழிபாடும் மக்களின் உள்ளத்தைத் தூய்மைப் படுத்துவதற்காகவும் அவர்களுடைய எண்ணங்களிலே உயர்ந்த குறிக்கோள்களை மலரச் செய்வதற்காகவுமே ஆதியில் ஏற்பட்டன. ஆனால் பிற்காலத்தில் அவற்றின் உண்மையை உணராதவர்களின் கையிலே

சிக்கி அதனால் சிறிது இழுக்கு ஏற்பட்டது. அந்த மாசைத் துடைக்கும் வகையிலே "திருக்கோயில்" சிறந்த தொண்டாற்றும் என்று நம்புகிறேன்.

அறிவும் உள்ளமும் ஒன்றிய பாதைதான் நாகரிகப் பாதை. அந்த நாகரிகப் பாதையில் மக்கள் அனைவரும் தயங்காது செல்ல "திருக்கோயில்" அறிவுச் சுடர்விட்டு மங்காத ஒளிவிளக்காகப் பிரகாசிக்கும் என்று நம்புகிறேன்.

**காமராஜ்.**

  

M. BAKTHAVATSALAM,
Home Minister

FORT. ST. GEORGE,
MADRAS.
DATE 11-9-58

நம் கோயில்கள் நாம் அனுபவித்து நல்வாழ்க்கை வாழ்வதற்குரிய சிறந்த பொக்கிஷங்களாகும். காந்தியடிகள் பிறந்த இந்த நன்னாளில் வெளிவரும் "திருக்கோயில்" ஆலயங்களின் அருமையை நமக்கு நன்கு விளக்கும். தமிழ் மக்கள் அனைவரும் "திருக் கோயிலை" வரவேற்பார்கள்.

**எம். பக்தவத்சலம்.**

  

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு

## ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள்

'திருக்கோயில்' என்னும் உயரிய பெயர் புனைந்த மாத இதழ் சென்னை மாநில அறநிலையப் பாதுகாப்புப் பகுதியிலிருந்து வெளிவந்து உலவப்போகிறது என்ற செய்தி அறிந்து பெருமகிழ்ச்சி அடைந்தோம். நலம் உண்டாகும் என்ற எண்ணம் எழுந்தது.

திருக்கோயில்களை அமைப்பதும், அவற்றைப் பாதுகாப்பதும், கோயில்களின் பணியாளரைப் பரிபாலிப்பதும் மக்களுக்கு இன்றியமையாத முதற்கடமைகளாகும். மக்களுடைய உடல் வளர்ச்சிக்கும், பொருள் வளர்ச்சிக்கும் உரிய தொண்டுகள் சிறந்தனவே

ஆயினும் அவைகளால் மக்களின் துயரம் அறவே ஒழிந்ததைக் கண்டிலேம். ஆன்ம வளர்ச்சிக்குரிய தொண்டினாலேதான் அமைதி உண்டாகும். திருக்கோயிற் பாதுகாப்பு அதனைச் சார்ந்தது. 'வையகம் துயர்தீர' வேண்டுமானால் திருஞானசம்பந்தர் பணித்த படி "அரன் நாமமே எங்கும் சூழ" வேண்டும். அதற்குத் தக்க சூழ்நிலையை உண்டாக்கு வது மிகச் சிறந்த தொண்டு நெறியாகும்.

எங்கும் திருவுடைய உள்ளமே திகழவேண்டும். திருக்கோயில் இல்லாத திருவில் ஊர் இந்நாட்டில் இடம்பெறாமல் இருக்கவேண்டும். அடவிகளையும் திருக்கோயில் உள்ள திருப்பதிகள் ஆக்குவோம்.

முனிவரும் விண்ணவரும் வழிபட்டுப் பேறுபெற்ற அருள்வடிவாம் மகாலிங்கங் களும், மூர்த்திகளும் பண்டை நிலைமாறி சிவனுடைமையாம் இத்தென்னாட்டில் பழைய மரங்களின் அடியிலும், கழனிமேடுகளிலும், காடு கரம்புகளிலும் பேணுவாரின்றி இருக் கின்றன. சமயப்பற்றுள்ள மக்களின் கண்முன்னரே பல திருத்தளிகள் சிதைந்தும், மறைந் தும் நூற்றுக்கணக்கில் அங்கங்கே காணப்படுகின்றன. ஆங்காங்கு உறையும் மக்கள் அம்மூர்த்திகளுக்கு ஒரு கூரைத்தளியேனும் அமைத்து ஆவின் நெய்விளக்கேற்றி வழி படச் செய்வது நலம். பெருமன்னர்களின் பூசைகளை ஏற்ற மகாதேவனும், மற்ற தேவர் களும் சிறுபிள்ளைகளின் விளையாட்டையொத்த இந்தச் சிறு முயற்சிக்கும் உவந்து அருள் பாலிப்பார்கள். சிதைந்த பழங்கோயில்களைத் திருத்துவதற்கும் வழிபாடு மறைந்த மூர்த்தி களை வழிபாடு செய்வதற்கும் உரிய வழிதுறைகளை இந்தத் 'திருக்கோயில்' காட்டவேண் டும் என்று விழைகிறோம்.

அன்பு ததும்பும் உள்ளத்தோடு செய்யும் கோயில் வழிபாட்டால் குடிகள் ஓங்குக. நாடு வளம்பெறுக. தமது திருமந்திரத்தில் இந்த தத்துவத்தை உபதேசித்தருளிய திருமூலர் உள்ளம் குளிர்க.

ஆலயங்களை நன்கு பாதுகாத்து வரினே நாவுக்கரசர் பணித்தபடி 'அரன் கோவில் வலம்வரவும்', 'கறைக்கண்டன் உறைகோயில் கோலக் கோபுரக்கோகரணம் சூழ வும்' இயலும். அவற்றைச் செய்து மக்கள் இறைவன் அருள்பெறும் வாய்ப்பை அடை வார்கள்.

ஒவ்வொரு திருப்பதியிலும் 'தென்புலத்தார் தெய்வம்... ஓம்பும்' திறத்தைக் குறித்து அப்பதியின் பெருமைகூறும் பண்டை நூல்கள் விரித்துரைக்கின்றன. அம் முறைப்படி தீர்த்த வழிபாடு, தலவழிபாடு என்பவற்றை விளக்கி மக்கள் தூய்மை பெறவும் வழிவழியே அவர்கள் நலம்பெற்று வாழவும் இந்தத் 'திருக்கோயில்' சிறந்த வகையில் பணி யாற்றி மேன்மேலும் ஓங்குவதாகுக!

வாழ்க திருக்கோயில்கள்!

வளர்க 'திருக்கோயில்'

  

உ

குருபாதம்.

தருமபுர ஆதீனம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம்,
மாயூரம் P.O.
16-9-58.

'ஞாலம்நின் புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே'

'திருக்கோயில்' என்னும் பெயர்கொண்ட ஒரு புதிய மாத வெளியீடு மகாத்மா காந்தி ஜயந்தியன்று தோன்றுகிறது. உலகப் பெரியாரை நினைவூட்டிக்கொண்டே அவ் விதழ் பிறப்பதால், அதை உலகம்போற்றி வரவேற்றுப் பயன்படுத்திக் கொள்ளும் என்றும் மேன்மேலும் அது வளர்ந்து எல்லோரும் புகழும் ஏற்றத்தை அடையும் என்றும் உறுதி யாகக் கூறலாம்.

இது பல ஆண்டுகட்கு முன்னரே தோன்றியிருக்க வேண்டிய தாயினும், சென்னை மாநிலம் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் "நல்லறங்காவலர்" கனம். உயர்திரு எம். பக்தவத்ஸலம், B.A., B.L., அவர்கள் பரிபாலன காலத்தில் தோன்றுவது கடவுள் கட்டளை போலும். இதுவரையில் இருந்த அறநிலையப் பாதுகாப்புத் தலைவர்களுக்குக் கிடைக்காத வாய்ப்பை இப்போதுள்ள சைவத்திரு அ. உத்தண்டராம பிள்ளை, B.A., B.L., I.A.S., அவர்கள் பெற்றுள்ளார்கள். இவ்வெளியீடு இப்பெரியோர்களின் நல்ல சிந்தனையின் நிலையான அறிகுறியாய்த் திகழும் ஞானச் சின்னம். ஆலய பரிபாலனம் புரியும் வினைஞர் அனைவர்க்கும் வழிகாட்டி வரத்தக்க அறிவுக் களஞ்சியம். அறநிலையங்களின் பழைய புதிய வரலாறுகளையும், ஆக்க வழிகளையும் காட்டிவரத்தக்க மாசற்ற நூற்கண்ணாடி. அரும் பெருங் கலைகளும், சமயப் பற்றும், சமய நூலறிவும், தெய்வபக்தியும், புராதன சமயச் சின்னங்களை அழியாமற் காத்துவரும் முறைகளும், இவை போலும் பிற நலங்களும் ஓங்கி வளர உறுதுணையா யிருக்கும் உன்னத சாதனம்.

இத்தகைய "திருக்கோயில்" நாடெங்கும் பரவவும், ஒவ்வொருவர் கையிலும் இது திகழவும், நாடெலாம் இதனால் நலம் பெறவும் வேண்டுமென்று ஸ்ரீ சொக்கநாதர் திருவடிமலரைச் சிந்திக்கின்றோம்.

வளர்க அறங்கள்.
வருக திருக்கோயில்.
வாழ்க பக்தர்கள்.

  

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
# அருள்நந்தித் தம்பிரான் அவர்கள்
## திருப்பனந்தாள்.

சைவசமய சாத்திர அறிவும் இலக்கிய அறிவும் அவற்ருல் சீலமும் நிரம்பப் பெற்ற திரு. அ. உத்தண்டராம பிள்ளை அவர்கள், ஐ.ஏ.எஸ்., அறநிலையக் கமிஷன ராகப் பதவி ஏற்றதுமுதல் முன்னவனுர் கோயில் சிறப்பொடு பூசனை காலத்தில் நடைபெற்று வருவது கண்கூடு; பல கோயில் திருப்பணிகள் நடைபெறுகின்றன. இவர்கள் சிவசிந்தனை மறவாது ஆலயப்பணிகள் பலப்பல புரிந்துவருகின்றனர். இவற்றுக்குச் சைவ உலகம் கட்ப்பாடுடையது.

இவர்கள் காலத்திலேயே "திருக்கோயில்" என்ற பெயரால் ஒரு திங்களிதழ் துவக்கப்பெறுவது மகிழ்ச்சிக்குரியது. இப்பத்திரிகையில் கோயில்க்ளின் சிறப்பை யும் வரலாறுகளையும் பிறவற்றையும் விளக்கும் தமிழ்க் கட்டுரைகளுடன் ஆங்கிலக் கட்டுரைகளும் வெளிவரின் தமிழ்நாடு மட்டுமன்றி வெளி உலகும் பயன் பெறுவ தாகும்.

"மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்."

சிவ சிவ.

  

Tirumalai.
17-9-58.

## ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்திர மகாதேசிகர்ஸ்வாமி
## ஸ்ரீ அஹோபில 44-வது மடாதிபதி

Your kind letter was brought to His Holiness's notice. He was overjoyed to learn that the above periodical is coming out under your auspices at a very opportune time. He wanted me to convey His blessings for the success of this laudable attempt and has given the Manthrakshatha of Sri Lord Lakshminarasimha.

Manager.

  

## ஸ்ரீ வானமாமலை மடம் நாங்குனேரி

சென்னை ஹிந்து மததர்மபரிபாலனத்துறையாரால் "திருக்கோயில்" என்ற பெயர் கொண்ட மாதாந்திர பத்திரிகை ஒன்று நாளது வருஷம் அக்டோபர் மாதம் முதல் வெளியிடப்படுவதைக் கேட்டு மிகவும் சந்தோஷிக்கிறோம். இந்தப் பத்திரிகை மேன்மேலும் அபிவிருத்தியடைந்து, நம் நாட்டின் புராதனப் பண்புகள் தழைத் தோங்கி வளரும்படி கிருபை செய்தருளவேணுமாய் ஸ்ரீவரமங்கைத் தாயார் ஸன்னதி யில் பிரார்த்தித்து மங்கள சாஸனம் செய்கிறோம்.

ஸ்ரீ வானமாமலை ராமானுஜ ஜீயர்,
28-9-58

# திருக்கோயில்

ஆலயம் தொழுவது சாலவும் நன்று
அரனை மறவேல், திருமாலுக் கடிமைசெய்
—ஔவையார்.

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழார் எனின்
—திருவள்ளுவர்.

ஆக்கையாற்பயனென் அரன்கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப் போற்றிஎன்னுதஇவ்
வாக்கையாற் பயனென்
—திருநாவுக்கரசர்.

செம்மலர் நோன்ருள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே
—மெய்கண்டார்.

மானிடப் பிறவி தானும் வகுத்தது மனம்வாக்
காயம்
ஆனிடத் தைந்து மாகும் அரன்பணிக் காகவன்ரே
—சிவஞான சித்தியார்.

உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே!
—நம்மாழ்வார்.

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
—திருமூலர்.

இறையியல்போடியைந்த உலகியலறிவே வாழ்க்கைக்கு இன்றியமையாத தென்பதைத் தன் வாழ்க்கையின் மூலம் உலகுக்கு உணர்த்திய நம்நாட்டுத் தந்தை மகாத்மா காந்தி யண்ணல் அவதார நாளாகிய இன்று 'திருக்கோயில்' என்னும் திருப்பெயருடன் ஒரு திங்கள் வெளியீடு உதயமாகிறது. சென்னை அரசாங்கத்தின் ஓர் அங்கமாகிய சென்னை இந்து சமய அறநிலைய நிர்வாகத் துறை ஆணையர் அலுவலகத்தினின்றும் இவ்வெளிவீடு அரசாங்க அனுமதியுடன் வெளியிடப் பெறுகின்றது. உலகத்திலேயே இந்தியா ஆத்மிகத் துறையில் முதன்மைபெற்று விளங்குகிறது. இந்துசமயத்தில் திருக்கோயில்களும் ஆங்குள்ள மூர்த்திகளும் தீர்த்தங்களும் முக்கியத்துவம் வாய்ந்தன. அதிலும் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களும் வானளாவிய கோபுரங்களும் வனப்புமிக்க மூர்த்திகளும் ஆகம வழிபாட்டு முறைகளும் தனிச் சிறப்புடையன. நம் முன்னோர்கள் திருக்கோயில்கள் அமைத்த தோடல்லாமல் வழிபாடு செவ்வையாக நடைபெறுதற்கு வேண்டிய சொத்துக்களையும் அமைத்தனர். காலப்போக்கில் இக்கோயில்களின் நிர்வாகத்தில் பலமாறுதல்கள் ஏற்பட்டு அரசாங்கம் ஓரளவு தலையிட வேண்டிய சூழ்நிலைகள் காரணமாகச் சில சட்டங்கள் செய்யப்பெற்றன. சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் பனகாலரசர் முதலமைச்சராயிருந்தபோது இந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டமொன்று இயற்றி ஒரு குழுவினர் நிர்வாகத்தில் ஒப்புவிக்கப் பெற்றது. அந்நாளில் ஓய்வு பெற்றிருந்த நீதிபதி சதாசிவ ஐயர் அவர்கள் இவ்விலாகாவின் முதற் குழுவுக்குத் தலைவராக அமைந்தது தென்னுடு செய்த பாக்கியமே. 1951-ம் ஆண்டு இச்சட்டம் சீர் திருத்தப் பெற்று ஓர் ஆணையர் நிர்வாகத்

நித்திய பிரார்த்தனையின் மூலம் ஒவ்வொருவரும் உவமிக்க முடியாத புத்துணர்ச்சியை வாழ்க்கையில் பெறமுடியுமென்பதை அனுபவத்தால் கண்டு கொள்ளலாம் —மகாத்மா காந்தி

தில் அமைக்கப்பெற்றுள்ளது. ஆந்திர மாகாணம் தனியாக அமைக்கப்பெற்ற பின் அங்கு 'ஆராதனை' என்ற ஒரு மாத வெளியீடு தோன்றியுள்ளது. சென்னை மாகாணத்திலும் ஒரு வெளியீடு அவசிய மென்பதை அரசாங்கத்தார் உணர்ந்து 'திருக்கோயில்' என்ற இவ்வெளியீட்டுக்கு அனுமதியளித்துள்ளனர். இராமநாத புரம் மாவட்டத்தில் தாசில்தாராயிருந்து அண்மையில் ஓய்வு பெற்றுள்ள திரு வாளர் G. கலியாணம்பிள்ளை, M.A., அவர்கள் இதன் ஆசிரியராகப் பணியேற்றுள்ளார். சென்னை சைவ சமாசத்துடன் அவர் பல ஆண்டுகள் தொடர்பு கொண்டவர். சமயப்பற்றும் மொழிப்பற்றும் சமரசக் கொள்கைகளும் உடைய தொண்டர். இவ்வெளியீட்டுக்கு மக்கள் பூரண ஆதரவும் திருக்கோயில்கள் திருமடங்கள் அறநிலையங்கள் முதலிய அனைவருடைய ஆதரவும் கிட்டுமென்று நம்புகிறேன். இவ் வெளியீடு நல்ல முறையில் எல்லா மக்களுக்கும் பயன்படும் வகையில் அமைவதற்கு எல்லோருடைய அபிப்பிராயங்களையும் வரவேற்கிறோம்.

இவ்வுலகில் எக்காலத்திலும் கடவுள் உண்டென்போரும் இல்லையென்போரும் உளர். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் அவன் அவள் அது என்னும் பாகுபாட்டில் அடங்கும். இதைத் தோன்றி நின்று அழிவதைக் காணும்போது அவை தானே இயங்கா வாதலால் அவற்றைத் தோற்றி இயக்கும் ஒரு பரம் பொருள் இருக்க வேண்டுமென்பதே நமது சமயத்தின் அடிப்படைக்கொள்கை.

'ஒருவனே டொருத்தி ஒன்றுஎன் றுரைத்திடும் உலக மெல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டும் —சித்தியார்.

நாமவ னிவனுவன் அவளிவ ளுவள்எவள்
தாமவ ரிவருவர் அதுவிது உதுஎது
விமவை யிவையுவை அவைநலந் தீங்கவை
ஆமவை யாயவை யாய்நின்ற அவரே
—நம்மாழ்வார்.

கடவுள் என்ற சொல்லுக்கே எல்லாத் தத்துவங்களையும் கடந்த பரம்பொருள், எல்லாப் பொருட்களையும் தோற்றுவித்து அவற்றின் உள்ளே உயிர்க்குயிராய் நின்று இயக்குபவர் (கடவுபவர்) என்பது பொருள். அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்து தன்னருள் வெளிக்குள்ளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக் கிச்சை வைத்து உயிர்க்குயிராய்த் தழைத்ததெதுவோ அதுவே கடவுள் என்றார் தாயுமான சுவாமிகள்.

இந்து சமயம் ஏனைய சமயங்களைப் போல் ஒரு காலத்தில் ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டதன்று. இறைவனைப் போன்று அநாதியாய் உள்ளது. எல்லாச் சமயங்களின் அடிப்படை உண்மைகளையுந் தன்னகத்தே கொண்டு பிற சமயங்களுக் கெட்டாத உண்மைகளையும் விளக்கி இறைவன் திருவடிகளை எல்லோரும் அடையும் வழிகளை வகுத்துக் கொடுத்த தனிச் சிறப்புடையது. இவ்வுலகிலுள்ள உயிர்கள், அனைத்தும் இறைவனை யடைந்தவர்கள் அவனடியை அடையப் போகிறவர்கள் என்ற இரண்டு பிரிவுகளில் அமையும். ஒவ்வொரு உயிரும் தன் வினைப் பயனை யனுபவித்தே தீரவேண்டும். அதற்காகப் பல பிறவிகள் எடுத்தே யாகவேண்டும். இறைவனடியை யடையத் தடையாயிருக்கும் ஆணவம் கன்மம் மாயை என்னும் உலக பாசங்கள் நீங்கும்வரை பிறவியுண்டு. முடிவில் எல்லா உயிர்களும் இறைவனடியைச் சேரும் என்பதே இந்து மதத்தின் கோட்பாடு. இம் முப்பொரு

---

பல கடமைகளைக் கவனிக்கும் பொறுப்பு வாழ்க்கையில் ஏற்படும்பொழுது, உள்நின் றுணர்த்தும் உனது தெய்வக்குரலைக் கேட்டு அதன்படி நட.
—மகாத்மா காந்தி

ஞுண்மையை பதி பசு பாசமெனச் சைவ மும் பரம் ஜீவன் ஜகம் என வைணவமும் கூறும்.

'பதியினைப்போல் பசுபாசம்அனுதி
—திருமூலர்.

'அற்றதுபற்றெனில் உற்றதுவீடு'
— நம்மாழ்வார்.

'மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும், ஓதும்
குருகையர்கோன்
யாழினிசை வேதத்தியல் —பட்டர்.

எல்லா உயிர்களும் எந்நிலையில் நின்றுலும் எக்கோலங் கொண்டாலும் எச்சமயத்தில் பிறந்தாலும் உண்மையாக இறை வழிபாடு செய்பவர் அருள் பெறுவர் என்பதே இந்துசமயத்தின் முடிவு.

'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனுர்தாம் வருவர்'
—சித்தியார்.

'ஆரொருவர் உள்குவித்தா ருள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்'
'நினைப்ப வர்மனம் கோயிலாக் கொண்டவன்'
—அப்பர்.

தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர் தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ண மாழியா னும்.
—பேயாழ்வார்.

அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவ ரிறையவர் எனவடி யடைவர்கள்
அவரவ ரிறையவர் குறைவில ரிறையவர்
அவரவர் விதிவழி யடையநின் றனரே.
—நம்மாழ்வார்.

சமயகோடிகளெல்லாம் தம்தெய்வம் எம் தெய்வம் என்று எதிர் வழக்கிட நின்ற பரம்பொருளெதுவோ அதையடைய ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு வழியை வகுத்துக் கொண்டது. நம் சமயாச்சாரியரான நாயன்மார்களும் ஆழ்வார்களும் நமக்கு வழிகாட்டிகளாக அமைந்துள்ளனர். திருக்கோயில்கள் இறைவழிபாட்டுக்கு இன்றியமையாத சாதனங்கள் என அறிவுறுத்தியதோடல்லாமல் தாங்களே பல தலங்களுக்கும் சென்று மூர்த்தி தலம் தீர்த்தம் இவற்றைத் தெய்வமணங் கமழும் பாடல்களில் போற்றிப் புகழ்ந்துள்ளனர். 'திருநெறிய தமிழ்' ஓதிய திருஞானசம்பந்தரும் மற்ற சமய குரவர்களும் நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பினர். ஆழ்வார்களும் 'ஞானத் தமிழ்' புரிந்து தெளியாத மறை நலங்களைத் தெளிவித்தனர்.

நம்முடைய திருக்கோயில்கள் சங்கீதம், ஓவியம், சிற்பம், நடனம் முதலிய எல்லாக் கலைகளுக்கும் உறைவிடங்களாக உள்ளன. திருக்கோயில்கள் திருஉருவ வழிபாடு இவற்றை அவசியமில்லாதவை என்று கூறும் சமயத்தினரும் இறை வழிபாட்டுக்கென்று தனி ஆலயங்கள் அமைத்துள்ளனர். மனம் என்பது ஒரு நிலையில் நிற்பதில்லை.

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல

என்பது குறள். அதனுலேதான்,

'சென்ற விடத்தால் செலவிடா து தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு'

என்றுர் நம் வள்ளுவர்.

மனத்தின் இயல்பு திரிதல். அதைத் தீய வழிகளில் செல்லாது தடுத்து நன்றின்

அன்பில்லாத பிரார்த்தனை மொழிகளைவிட, அன்போடு கூடிய மௌனமான பிரார்த்தனை மேலானது.
—மகாத்மா காந்தி.

பால் செலுத்துவதே அறிவு. ஒவ்வொரு உயிரும் இயல்பாகவே ஆசைகளின் வசப்பட்டது. அவ்வியல்பான காமத்தைத் தீய வழியினின்றும் மாற்றி நல்வழிப்படுத்தி மக்கள்பால் அன்பாகவும் இறைவன்பால் பக்தியாகவும் மிளிரச் செய்வதே அறிவின் பயன்.

'மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்'
—ஆண்டாள்.

'மக்கள் சேவையே மாதவ சேவை'

இறைவனிடத்தில் உண்மை யன்புடையார் எவ்வுயிரும் பராபரன் சந்நிதியென்றும், இயங்கும் உயிரனைத்தும் ஈசன் கோயில் என்றும், அவர்கள் நடமாடும் கோயில்கள் எனவும் அத்தொடர்பால் எல்லா உயிர்களிடத்தும் அன்புடையராக இருப்பர். வள்ளுவரும்

'அறிவினா லாகுவதுண்டோ பிறிதின்நோய்
தன்னோய்போல் போற்றாக் கடை'

என்றார்.

இறைவன் எங்கும் உளன். அவன் எல்லாவற்றையும் கடந்தும் எல்லாவற்றிலும் கலந்தும் 'அணுவுக்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய்' விளங்கும் தன்மையை வியாபகதத்துவமாக பாற்கடலில் பள்ளி கொண்டு அண்டசராசரங்களை எல்லாம் தன்னுள்ளே யடக்கி விசுவரூபமாய் அறிதுயில் கொள்ளும் பெருமாளாகவும், எல்லா உயிர்களுக்குள்ளும் உயிர்க்குயிராய் நின்று ஆட்டி வைக்கும் தத்துவத்தை நடராஜராகவும் காண்கிறோம்.

அனைத்துநீ அனைத்தினுட் பொருளு நீயாதலின்
உறைவு முறைவது மிலையே யுண்மையு
மறவியில் சிறப்பின் மாயமாரனையை
—பரிபாடல்.

'தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி'
—திருவாசகம்.

நடராஜதாண்டவம் பஞ்ச கிருத்தியத்தையும் உணர்த்துகிறது.

பாற்கடலென்றது தூய மனத்தில் இறைவன் உறைவான் என்பதைக்காட்டுகிறது. இவ்வாறு ஒவ்வொரு உருவமும் தத்துவப் பொருளுடையது. பின்வரும் வெளியீடுகளில் அவை விளக்கப்பெறும்.

தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு
—உண்மை விளக்கம்.

திடவிசும்பு எரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாய்அவை யவைதொறும்
உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண் டசுரனே
—நம்மாழ்வார்.

திரு என்ற சொல்லுக்கே இறைவன் என்று பொருள். 'திருவே என் செல்வமே' என்றார் அப்பர். 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது யாவருமறிந்த பழமொழி. 'திருக்கோயிலில்லாத ஊர் திருவிலூர்; அது ஊரல்ல அடவிகாடே' என்றார் அப்பர். பண்டைய அரசர் திருக்கோயில்கள் அமைத்து வழிபாட்டிற்குத் தகுந்த வருமானம் கிட்டும் வகையில் சொத்துக்களும் வைத்தனர். திருப்பணிகள் செய்து திருக்கோயில்களைச் செம்மையாகப் பாதுகாத்து வரவும் விரும்பினர். தென்காசிக் கோயிலைக் கட்டிய பராக்ரம பாண்டியன் தனக்குப்பின் திருப்பணியில் ஈடுபடுவோருக்கு முன்ன

தூய்மையற்றவனும்கூட உண்மையில் ஆண்டவனை நோக்கிப் பிரார்த்தித்தால் பயனடைவன் என்பது எனது சொந்த அனுபவம்.
—மகாத்மா காந்தி.

தாகவே நன்றியும் வணக்கமும் செலுத்திய செய்தி கல்வெட்டில் காண்கிறோம்.

யாரா யினும்இந்தத் தென்காசி
மேவு பொன்னுலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால்அப்
போதுஅங்கு வந்துஅதனை
நேராக வேதிருத் திப்புரப்
பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன்
பராக்ரம பாண்டியனே

திருக்கோயில்கள் பராமரிப்பில் நம் முன்னோர் எவ்வளவு கவனம் செலுத்தினார்கள் என்பது நன்கு புலப்படுகின்றதல்லவா! சென்ற மூன்று ஆண்டுகளில் நம் மாகாண அரசாங்கமும் பொருளுதவி செய்து மக்கள் உதவியுடன் பல திருக்கோயில்களில் திருப்பணி நடைபெற்றிருக்கின்றன. அவைகளின் விவரம் இதனடியில் சேர்க்கப்பெற்றுள்ளது.

தமிழ் நாட்டிலே 'கோயில்' என்றால் சிறப்பாகச் சிதம்பரமும் திருவரங்கமுமே குறிக்கப்பெறும்.

'அத்தன் பரதத்துவனித்த நடந்தமரும்
பொதுவின் பெயர் மன்றமலஞ்
சத்தும் பரிரண்மயகோச மகந்தனி
புண்டரிகங் குவைகண் சகனஞ்
சுத்தம் பரமற்புத மெய்ப்பதமச்
சுழுனுவழி ஞானசுகோதயநற்
சித்தம் பரமுத்தி பரப்பிரமந் திகழும்
சபைசத்தி சிவாலயமே'

'ஆராத வருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்தி மன்னர்க்களித்த கோயில்
தோயாத தனிவீரன் தொழுதகோயில்
துணையான வீடணற்குத் துணையாங் கோயில்
சேராத பயனெல்லாம் சேர்க்கும் கோயில்
செழுமறையின் முதலெழுத்துஞ் சேர்ந்த கோயில்
தீராத வினையனைத்தும் தீர்க்கும் கோயில்
திருவரங்க மெனத்திகழும் கோயில் தானே.'

செந்தமிழ்க் கடவுள் முருகன் ஆறு படை வீடுகளுள் சிறந்து விளங்குவது 'பழநி' என வழங்கும் திருவாவிநன்குடி என்னும் திருத்தலம்.

'கூறுடை யாளும் குன்றுக் குணப்பெருங் குன்று ஞானப்
பேறுடைப் பழநியென்னப் பெயரது மருவி யெங்கள்
ஆறுமா முகவன்வைகும் நகரமு மன்று தொட்டு
வீறுதொல் பழநீ என்றே விளம்பின உலகமூன்றும்'

1-11-56 லிருந்து கன்னியாகுமரி மாவட்டம் சென்னை மாகாணத்துடன் இணைக்கப் பெற்றுள்ளது. தமிழகத்தின் தெற்கெல்லையாகிய தென்குமரியில் 'நிலத் திரைக் கடலோரத்திலே நித்தம் தவம்புரி' யும் குமரி பகவதியம்பிகையின் திருக்கோயிலும் தனிச்சிறப்புடையதே. ஏனைய சமயங்களில் இறைவனைப் பிதாவாகக் கருதுவதுண்டு. நமது சமயத்திலோ கடவுளை அம்மையப்பனாக அர்த்தநாரீசுர வடிவத்தில் உமாமகேசுரனாக, லக்ஷ்மி நாராயணனாக வழிபடுவது மரபு. 'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே', 'பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' எனவும் இறைவன் கருணையைப் போற்றி யுள்ளனர். 'அகிலாண்டகோடி ஈன்ற அன்னையே உனைப் பின்னையும் கன்னி என மறை பேசுமே' என்றும், 'பகவன் பிரம்மச்சாரி யாகும் பால்மொழி கன்னியாகும்', 'பெண்ணினல்லவளாம் பெருந்தவக் கொழுந்து' என்றும் கூறுவர் பெரியோர். மக்கள் தவம் செய்ய வேண்டிய முறையை உணர்த்தவே அன்னை தவக்கோலத்தில்

---

கடவுளிடம் நம்பிக்கை மிக மிகப் பிரார்த்தனையில் விருப்பம் அதிகரிக்கிறது. உடலுக்கு உணவு போன்றது உயிர்க்குப் பிரார்த்தனை —மகாத்மா காந்தி.

காட்சி யளிக்கிறாள் என்பதே அடிப் படைத் தத்துவம்.

இவ்விதழில் சிதம்பரம், திருவரங்கம், பழநீ, கன்னியாகுமரி தலங்களைப்பற்றிய குறிப்புக்களைக் காணலாம். நம் தேசத்தில் 275 தேவாரப் பாடல்கள் பெற்ற தலங் களும் 108 திவ்யப் பிரபந்தங்களால் மங் களாசாசனம் செய்யப்பெற்ற திருப்பதி களும் உள்ளன. அவற்றைப்பற்றிய குறிப்புகளும் மற்றும் சமய சம்பந்தமான கட்டுரைகளும் வரும் இதழ்களில் வெளி யிடப் பெறும்.

பத்திரிகைகள் உலகில் 'திருக் கோயில்' ஒரு புதிய முயற்சி. இதற்குச் சமயத் துறையில் பற்றுள்ள அறிஞர் பெருமக்கள் பூரண ஆதரவளிப்பார்கள் என நம்புகிறோம். இவ்வெளியீட்டுக்கு ஆசிச் செய்திகள் அனுப்பிய பெரியோர் கள் அனைவருக்கும் எங்கள் அன்பு கலந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித் துக் கொள்ளுகிறோம். இப் புது முயற்சி வெற்றிபெற்று மக்களுக்கு நற்பயனளிக்க வேண்டுமென்று எல்லாம்வல்ல இறைவ னிணையடிகளை இறைஞ்சுகின்றோம்.

**வாழ்க திருக்கோயில்! மெய்மையாம்**
**திருநெறி விளங்குக உலகமெல்லாம்!**
**'என்கடன் பணிசெய்து கிடப்பதே!**

**அ. உத்தண்டராமன்**
2-10-58.

# கோயில் திருப்பணிகள்

**1955-56.**

| | | |
|---|---|---|
| | **செங்கற்பட்டு ஜில்லா** | |
| 1. | பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் மலைவையாவூர் | 5000 |
| 2. | வெண்காடீஸ்வரர், மதுராந்தகம் | 6000 |
| 3. | விஜயராகவ சுவாமி, திருப்புட்குழி | 10,000 |
| 4. | சேக்கிழார், குன்றத்தூர் | 7000 |
| | **தென்ஆற்காடு ஜில்லா** | |
| 5. | பசுபதீஸ்வரர், திருவாமூர் | 8000 |
| 6. | பக்தஜனேஸ்வரர், திருநாவலூர் | 8000 |
| | **வடஆற்காடு ஜில்லா** | |
| 7. | அருணாசலேஸ்வரர், திருவண்ணாமலை | 6000 |
| 8. | வில்வநாத சுவாமி, திருவலம் | 12,000 |
| 9. | வேதபுரீஸ்வரர், திருவத்திபுரம் | 15,000 |
| | **தஞ்சாவூர் ஜில்லா** | |
| 10. | புஷ்பநாத சுவாமி, திருப்பூந்துருத்தி | 5000 |
| 11. | அப்பர் மடம் ஷை | 6600 |
| 12. | வில்வனேஸ்வரர், திருவைகாவூர் | 9400 |
| 13. | ஆபத்சகாயேஸ்வரர், திருப்பழனம் | 4000 |
| 14. | வேதபுரீஸ்வரர், திருவேதிகுடி | 4500 |
| 15. | ஓதவனேஸ்வரர், திருச்சோற்றுத்துறை | 5000 |
| 16. | கிரீடபுரீஸ்வரர், தில்லைஸ்தானம் | 3000 |
| 17. | சங்கமேஸ்வரர், செங்கனூர் | 10,000 |
| | **திருச்சிராப்பள்ளி ஜில்லா** | |
| 18. | சந்திரசேகரர், திருச்செந்துறை | 7500 |
| | **இராமநாதபுரம் ஜில்லா** | |
| 19. | புஷ்பவனேஸ்வரர், திருப்புவனம் | 3000 |
| | **மதுரை ஜில்லா** | |
| 20. | காளமேகப் பெருமாள், திருமோகூர் | 9000 |
| | **திருநெல்வேலி ஜில்லா** | |
| 21. | அழகிய கூத்தர், செப்பறை | 15,000 |
| 22. | ஏகாந்தலிங்கேஸ்வரர், கண்டீஸ்வரம் | 6000 |
| | **கோயம்புத்தூர் ஜில்லா** | |
| 23. | அவிநாசிலிங்கேஸ்வரர், அவிநாசி | 6000 |
| 24. | திருமுருகநாதஸ்வாமி, திருமுருகன் பூண்டி | 5000 |
| | **சேலம் ஜில்லா** | |
| 25. | அர்த்தநாரீஸ்வர், திருச்செங்கோடு | 5000 |
| | **கேரளம்** | |
| 26. | இராகவபுரம், செருத்தழாம் | 5000 |
| 27. | பகவதி, குன்னம்மல் அம்சம் | 6000 |
| | **கர்நாடகம்** | |
| 28. | சங்கரநாராயணர், சங்கரநாராயண | 8000 |
| | மொத்தம் | 2,00,000 |

1956—57 திருப்பணி விவரம் அடுத்த இதழில் வெளிவரும்.

# சைவம்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T.

## சைவம் என்னும் சொல்லின் பொருள்

சைவம் என்பது சிவசம்பந்தம் உடையது எனப் பொருள்படும். அஃது உலக முதற் பொருளாகிய கடவுளைச் சிவம் எனத் தெளிந்து வழிபடும் நெறிக்குப் பெயராகி வழங்கி வருகிறது. சைவம் எனினும் சிவநெறி எனினும் சைவ சமயம் எனினும் ஒக்கும்.

## சிவம் என்பதன் பொருள்

கடவுள், இறைவன், முதல்வன் என்றாற் போலப் பெரியோர்கள் உலக முதற் பொருளுக்கு இட்டு வழங்கிவரும் பெயர்கள். அம் முதற் பொருளின் ஒவ்வோரியல்பை நினைவூட்டும் **கடவுள்** என்னும் பெயர் யாவர் உணர்வையும் செயலையும் கடந்தது என முதற் பொருளின் எட்டாத நிலையினை அறிவிக்கும்; இறைவன் என்பது எப்பொருளிலும் தங்குபவன் என எங்கும் உள்ள நிலைமையைக் குறிக்கும்; முதல்வன் என்பது எப்பொருட்கும் முற்பட்டு நின்று அதன் தொழிற்படுத்துபவன் என எல்லாவற்றிற்கும்தான் சார்பாயிருந்து நடாத்தும் வினை முதலாந் தன்மையை (பரம ஆதார நிமித்த காரணன் ஆம் தன்மையை) உணர்த்தும். இவற்றைப் போலச் சிவம் என்னும் பெயர் முதற் கடவுளது எத்தகைய மாறுதலும் எய்துதல் இன்றித் தூய பேரின்பப் பொருளாய் அனுபவப்படும் தன்மையை உணர்த்துவதாகும். இது செம்பொருள் என்னும் சொல்லோடு ஒத்த பொருள் உடையது.

முதல்வன், உலகப் பொருள்களுள் ஒன்றல்லனாய் பெண் ஆண் அலியெனும் பெற்றியனாய் நிற்றலின், அவன், இந்நெறிக்கண் சிவம் என ஆண்பாற் சொல்லாலும், சிவை (சிவா) எனப் பெண்பாற் சொல்லாலும், சிவம் என ஒன்றற்பாற் சொல்லாலும் ஒப்ப வழங்கப்படுதல் அறியத் தக்கது. பெண்ணாண் அலியெனும் பெற்றியன் காண்க! என்பது திருவாசகம்.

## சிவம் என்றற்குக் காரணம்

சிவநெறித் தலைவர்கள் கடவுளைச் சிவம் (செம்பொருள்) எனச் சிறப்பித்துக் கூறுவதற்குக் காரணம் தெரியுமா? (*i*) கடவுள் உயிர்களின் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்ட பொருளாயினும் மெய்யுணர்வு நிலையில் தூய பேரின்பப் பொருளாய் அனுபவிக்க வருவது என்பதும் (*ii*) அத்தகைய உண்மையனுபவத்தை இம்மையிலேயே எய்திய எய்தும் பெருமக்கள் உளர் என்பதும் சைவத்தின் சிறப்பான அடிப்படை உண்மைகள் ஆகும். ஆதலின், கடவுளைக் கலையுணர்வு மட்டும் கொண்டு பேசாது, உண்மை அனுபவம் பற்றி வழங்கலுறின் எத்தகைய மாறுதலும் இல்லாத தூய பேரின்பப் பொருள் எனக் குறிப்பித்தலே பொருத்தம் ஆம். ஆதல்பற்றி அஃது இந்நெறிக்கண் சிவம் எனவும், செம்பொருள் எனவும் சிறப்பித்து சொல்லப்படுவதாயிற்று. இச்சொல் இப்பொருள் பயக்கும் என்பதை,

> " குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்
> நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்
> அறைகுவர் சிவனென அறிவின் மேலவர் "

என்னும் காஞ்சிப் புராணச்செய்யுளால் அறிக. மங்கலக் குணமாவது தோற்றக் கேடுகளின்றி நித்தமாய், விகாரமின்றிச் செம்பொருளாய் நிற்றல்.

---

பிரார்த்தனையற்ற வாழ்க்கை பாலைவன வரட்டு வாழ்க்கையேயாகும். உள்ளத்துள் அமைதியளிப்பது பிரார்த்தனையே யாகும்.
—மகாத்மா காந்தி.

---

## எது சைவம் ?

முதற்பொருள் உயிர்களின் உணர்வின் முதலாய், எல்லா உயிர்களையும் தொழிற் படுத்தி அவற்றின் பாசப்பற்றறுத்து அறிவை வளர்த்து வருவது.*

ஆதலின் பொதுவாக நோக்குங்கால், எல்லா உயிர்களும் சிவசம்பந்தம் உடையவையே, யாவும் சைவமே ஆம். இப்பேருண்மையைத் திருஞானசம்பந்தர் புத்தர்களுக்குப் போதித்தார் எனப் பெரிய புராணம் கூறுகிறது. திருஞானசம்பந்தர் மதுரையிலிருந்து திரும்பும்போது திருத்தெளிச்சேரி என்னும் ஊர் வழியாக வந்தார்; அப்போது அங்கிருந்த புத்தர்கள், சாரிபுத்தன் தலைமையில், திருக்கூட்டத்தில் இருந்த ஓர் அன்பருடன் வாதம் செய்து தோற்றனர்; பேச்சில் தோற்ற போதிலும் சிவநெறியின் பெருமையை தெளியமாட்டாராய் மயங்கினர்; திருக்கூட்டத்து அன்பர் அவர்களை திருஞானசம்பந்தர் திருமுன்பு உய்த்தார்; திருஞானசம்பந்தர் "நின்றனவும் சரிப்பனவும் சைவமேயாம்" என உறுதிமொழி அருளி அவர்களைத் தெளிவித்தார். இன்னும் திருஞானசம்பந்தரது திருவவதாரங் கூறும்பொழுது, அவரைக் குறித்துத் "தாவில் சராசரங்களெல்லாம்— "சிவம் பெருக்கும் பிள்ளையார்" எனப் பெரியபுராணம் கூறுகிறது. இவ்வாற்றுல் எல்லாவுயிர்களும் சைவமேயாம். ஆயினும் அவை தமக்கு இயற்கையேயுள்ள சிவசம்பந்தத்தை அருளாசிரியன் வெளிப்பட்டு உணர்த்தின் அல்லது உணரமாட்டா; ஆதலின் அச்சம்பந்தத்தை உணர்ந்து, சிவத்தைத் தலைப்பட்டு நன்மையுறுதற்கு வேண்டும் ஆராய்ச்சியினையும் செய்தி முறைகளையும் வகுத்துக் கூறும் நெறியே சைவம் ஆகும்.

"தெய்வம் சிவமே, சிவன் அருள் சமயம் சைவம், சிவத்தொடு சம்பந்தம் என்றுன்" என்னும் திருச்சிற்றம்பல நாடிகள் வாய்மொழி சிந்திக்கத் தக்கது.

* 'பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் (வளர்க்கும்) ஆரியனே' என்பதுதிருவாசகம்.

## சைவத்தின் தொன்மை :

சிவவழிபாடும் சிவநெறியின் அடிப்படைக் கொள்கைகளும் வரலாற்றுக்காலத்து முற்பட்டதொன்மை (Prehistoric antiquity) உடையவை. இது நூல்களாலும் ஆராய்ச்சியாலும் விளங்கும் உண்மை. பற்பல சமயங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோர் ஆசிரியரால் நிறுவப்பட்டுப் பின் அவர் தம் மாணக்கர்களால் உலகில் பரப்பப்பட்டு வந்தன என்பதை அவற்றின் வரலாறு தெரிவிக்கும் *. ஆயின் சைவம் என்பது அவ்வாறு ஒருகாலத்து ஒருவரால் நிறுவப்பட்டு நடப்பதன்று. நிலவுலகத்தில் பண்டு தொட்டுப் பயின்று வருவது. இதன் அடிப்படையாய் உள்ள ஞான நெறியினைச் சிவபெருமான் முதன்முதல் நான்கு முனிவர்க்கு ஓர் ஆல நிழற் கீழிருந்து விளக்கியருளியதாகத் திருமுறைகள் முழங்குகின்றன.

**" ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும்**
**முப்பெழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி**
**காட்டினை "**

என்பது திருஞான சம்பந்தர் திருமொழி.

இந்நிகழ்ச்சியை உலகப் படைப்பின் தொடக்கத்தில் நிகழ்ந்ததாகவே திருஞான சம்பந்தர் குறிப்பிடுகின்றுர்.

இனி, சிந்து வெளியிலுள்ள மொகஞ்சோதாரோ (Mohanjo Daro) என்னும் இடத்தில் முப்பது ஆண்டுகளுக்கு முன் தோண்டி எடுக்கப்பட்ட புதைபொருள்களின் ஆராய்ச்சியால் புலனுகும் நாகரிகமும் பண்பாடும் மிக உயர்ந்தவை என்பதையும் அவை இற்றைக்கு 5000 ஆண்டுகள் முற்பட்ட தொன்மை உடையவை என்பதையும், ஆண்டுக் கிடைத்த பொருள்களுள் சிவலிங்கங்களும், யோக வடிவின் அமைந்த தெய்வ உருக்களும் உள்ளன என்பதையும் எல்லோரும் உடன்படுகின்றனர். இதனுல் சிவவழி

*எடுத்துக் காட்டாக, பௌத்தம், சைனம், கிறிஸ்துவம், இஸ்லாம் என்பவற்றின் வரலாற்றைக் காண்க. பிறவும் உண்மையான் நோக்கின் அவ்வாறே ஆம்.

என்னுடைய அமைதியைக் கண்டு பொருமைப்படுகின்றனர். அதற்குக் காரணம் நான் பிரார்த்தனை மனிதனேயொழிய படித்த மனிதனல்ல.
—மகாத்மா காந்தி

பாடு வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டதென்பது தெளிவு. இவ்விடத்தும் ஹறப்பா (Harappa) என்னும் இடத்திலும் கிடைத்த புதை பொருள்களை நன்கு ஆராய்ந்து, முதன்மையான அறிக்கையை வெளியிட்ட சர் ஜான் மார்ஷெல் (Sir John Marshall) என்னும் ஆங்கிலப் பெருமகனர் தமது அறிக்கையில் சிவநெறியின் தொன்மையைக் கீழ்வருமாறு வியந்து கூறுகிறுர்:

"மொகஞ்சோதாரோ ஹறப்பா என்பவை மறைவாக வைத்திருந்து நமக்கு வெளிப்படுத்தும் புது வெளிப்பாடுகள் பலவற்றுள் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது யாதோவென்னில், சிவநெறியின் வரலாறு செப்புக்கற்காலம், அன்றி ஒருகால் அதனினும் முற்பட்டதொரு காலத்தை எப்படிச் சொல்லுகிறது; அதுபற்றி அந்நெறி உலகத்தில் இஞ்ஞான்றும் வழக்காற்றில் உள்ள மிகப் பழைய நெறி ஆகற்பாலது என்னும் கண்டு பிடிப்பே ஆகும் * என்பது அன்னார் கூற்று.

ஸர்ஜான் மார்ஷல் மேலே நாட்டினராதலின் சைவத்தின் தொன்மை அவருக்குக் கண்டு பிடிப்பாகவும் (Discovery) வியப்பைத் தருவதாகவும் உள்ளது. நம் பரத கண்டத்தில் பண்டுதொட்டு இலக்கண வரம்புடையவையாய் வழங்கிவரும் செந்தமிழ் வடமொழி என்பவற்றை ஓரளவு அறிந்தார்க்குச் சிவநெறி தோற்றமில் காலமாக இருந்து வருகிறது என்பது இயற்கையாகத் தோன்றும்.

தொடரும்.

* "Among the many revelations that Mohanjo Daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the Chalco-lithic age or perhaps even further still and that it thus takes its place as the most ancient living faith in the world" - Mohanjo Daro and the Indus Civilization. Vol. 1, P. VIII.

---

யான் எப்படிக் கோபத்தை அடக்க முடிகிறது என்று கேட்கவேண்டாம். ஒவ்வொரு மனிதனும் பழகவேண்டிய முக்கிய பண்பு கோபத்தை அடக்கல். எவ்வாற்ருனும் கோபத்தை அடக்க முயலவேண்டும்.

கடவுள் பெருந்துன்பத்துக்கிடையே பொருமையுடனிருக்கிருரென்று கூறுவேன். ஏனெனில் உலகில் தீமை நிலவுகிறது. அவனிடத்துத் தீமையில்லையெனினும் அவைகளுக்குக் காரணனுய் அவைகளால் தாக்கற்றுமிருக்கிருர்.

என்னைச் சூழ மாறுதல்கள் கண்டுகொண்டே இருக்கிறேன். அவைகளுக்கு நிலைக்களனுய் அழியாப் பொருளொன்று இருப்பதாக யூகிக்கிறேன். பலன்காண் பொருள்கள் யாவும் அழிவதால் அவனொருவனே சத்தியமான பொருள்.

திணிந்த தோரிருளின் தூய ஒளி நிலவுவதைக் காண்கிறேன். எனவே கடவுள் ஒளிவடிவனென்றும், சத்தியப் பொருளென்றும், உஜ்ஜீவிக்கும் பொருளென்றும் கூறலாம். அவன் அன்புவடிவினன். முற்றும் நன்மையையே புரிபவன்.

—மகாத்மா காந்தி

# வைணவம்

திரு T. A. சீனுவாசாச்சாரியார்

## பழமையானதா ?

மக்களாகப் பிறந்த யாவருக்கும் முடிவான கொள்கை (குறிக்கோள்) ஏதேனும் இருந்தே தீரும். எல்லாக் கொள்கைகளிலும் மக்களுக்கு எது நிறைந்த இன்பத்தைத் தருமோ அதுவே முடிந்த கொள்கை ஆகும். நிறைந்த இன்பத்தைக் காட்டிலும் சுகம் தருவது வேறு எதுவும் இல்லை. மக்கள், . பிறந்தது முதலாக அனுபவிக்கும் எந்த இன்பமும் **தேகஇன்பம்** என்பதில் அடங்கிவிடும். இந்தத் தேக இன்பம் என்பது யாரிடத்திலும் சுத்தமானதாகவும் துன்பக் கலப்பு இல்லாததாகவும் பொருந்தி இல்லை. ஆகையால்தான் இதைவிட மேலான இன்பம் எது எனக் காணவேண்டி ஞானமுடைய நம் முன்னோர்கள் முயன்றார்கள். அப்படி முயன்ற அவர்கள் உடம்பை ஒதுக்கி, அதனை நடத்துவதாகிய உயிரை அறியத் தலைப்பட்டார்கள். ஒவ்வொருவரும் தம்முடைய ஆத்மாவை அறிவதே முடிந்த இன்பம் என்ற கொள்கை ஏற்பட்டது. இது ஆத் மாநந்தம் என்று கூறப்பட்டது. இது, முன்னே சொல்லப்பட்ட தேகானந்தத்தைவிட மேலானது தான். என்றாலும், இதுவே சிறந்ததாக கருதப்படவில்லை. ஆத்ம அறிவில் ஏற்றத் தாழ்வு இருப்பது இயற்கையாகி விட்டபடியால், இந்த இன்பமும் பூரண இன்பமாகப் புலப்படவில்லை. இதனால் ஞானிகள் மேலும் மேலும் வேதம் முதலான நூல்களின் துணைகொண்டு ஆராயலானார்கள். இப்படி ஆராய்ந்ததன் பயனாக, ஆத்மாவின் சக்திக் குறைவு தெரிய வந்தது. ஆகவே பூரண சக்தியுடைய பொருள் எது என்று நாடினார்கள். இப்படியான ஆராய்ச்சியால், உடம்புக்குள் உயிர் இருந்து நடத்துவது போலவே, உயிருக்குள்ளே ஏதோ ஒன்று இருந்து நடத்துகிறது என்ற முடிவு (சித்தாந்தம்) தோன்றலுற்றது. அப்படி நடத்துகிற பொருளையே கடவுள் என்று கருதலாயினர். இந்தப் பொருளின் தன்மையைப் பற்றிப் பலரும் பல முகமாக ஆராயலாயினர். அவரவர்களும் தங்கள் தங்கள் அறிவுக்குப்பட்டதை வெளியிட்டார்கள். அவர்கள் வெளியிட்டவற்றுள் ஒன்று, அந்தப் பொருள் எல்லாருக்கும் நன்மையை (மங்களத்தை)ச் செய்வது என்பது. மற்றொன்று, அந்தப் பொருள் எல்லாப் பொருள்களிலும், எல்லா உயிர்களிலும், நிறைந்து இருப்பது என்பது. முன்னதை சிவம் என்ற பெயரால் குறித்தனர். பின்னதை விஷ்ணு என்ற பெயரால் குறிப்பிட்டனர். மற்ற ஆய்வாளர்களுடைய கருத்துக்களெல்லாம் மேலே சொல்லப்பட்ட இந்த இரண்டுக்குள்ளே அடக்கப்பட்டன. எனவே, எல்லாவற்றையும் **கடந்து** நிற்பதும், எல்லாவற்றின் **உள்** நிற்பதும் தான் பரம் பொருளின் முடிந்த லட்சணமாக ஒப்புக்கொள்ளப் படலாயிற்று. (கட + உள் = கடவுள்) என்ற சொல் இதனை ஒருவாறு உணர்த்தும். இதுதான் **பூரண வியாபகம்** என்று பேசப்படும். இதற்குமேல் கடவுளுக்குச் சொல்லக் கூடிய லட்சணம் வேறெதுவும் இல்லை. இதனாலேயே அநாதி கால முதலாகச் சிவம், விஷ்ணு என்னும் பெயர்களால் முதற் பொருளை மக்கள் குறியிட்டு வழங்கி வழிபடலாயினர். பொருள் ஒன்றேதான் என்றாலும் அதன் சிறப்பை இந்த இரண்டுவிதப் பெயர்களால் தொன்று தொட்டு நம் நாட்டில் பேசி வந்திருக்கிறார்கள். ஆதலால் என்று சிவமும் விஷ்ணுவும் ஆகிய பொருள் உண்டோ அன்று தொட்டே **சைவமும் வைணவமும்** ஆகிய கொள்கைகள்

---

பெருமையில் எனக்கு விருப்பமில்லை. அது அரண்மனையிலுள்ள ஆரவாரங்களை யொத்தது. நான் ஒரு தொண்டன். தொண்டன் வேண்டுவது அன்பே யொழிய பெருமையன்று.

—மகாத்மா காந்தி.

உண்டு என்னலாம். பரமசுகம் என்கிற மோக்ஷத்தின் வாசலுக்கு இரண்டு பக்கத்திலும் நிலைத்துள்ள இரண்டு தூண்கள் இவை என்று நாம் கருதலாம்.

## இரண்டு மார்க்கமா ?

ஒரு மனிதனை, நாம் காண்கிறோம் என்றால் அவனுடைய வெளியே தெரிகிற உடம்பைத் தான் பார்க்கிறோம். ஆனால், அவன் உடம்புக்குள் உயிர் இருக்கிறதை நாம் பார்க்க முடியாவிட்டாலும் உணருகிறோம். ஒருவன் நமக்கு ஒன்றைக் கொடுக்க விரும்பினால் அவன் உயிர் மாத்திரம் உடையவனாய் உடம்பின்றி இருந்தால் எப்படிக் கொடுக்க முடியும்? அல்லது உடம்பு மாத்திரம் உடையவனாய் உயிரற்றுக் கிடப்பானாயின் எப்படி உதவ முடியும்? ஆகையால் உயிரும் உடம்பும் என்கிற இரண்டும் ஒன்றுபட்டிருந்தால் தான் பயன் படக்கூடும் என்பதை நாம் தெரியலாம். உயிர் கொடுக்க நினைக்கிறது. உடம்பு கொடுக்கிற தொழிலைச் செய்கிறது. இந்த இரண்டினுள் ஏது ஒன்று குறைந்தாலும் கொடை நடைபெருது. நினைப்பை செய்கையாக்கும் திறமையை ஆற்றல் (செய்தல்) என்றும் சக்தி என்றும் சொல்வர். இதனால் நினைப்பு எனப்படும் கிரியையும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது வேண்டும் போதெல்லாம் ஒன்றில் ஒன்று அடங்குவதாகிய ஒரே பொருளின் இரண்டு இயல்புகள் என்று நாம் குறிப்பிடலாகும். எனவே, சிவம் எனவும் விஷ்ணு எனவும் கூறப்படும் இருவேறு பெயர்களும், ஒரு பொருளின் இணைப்புற்ற இயல்புகளேயாம் என்று கொள்ளப்படுதல் தக்கதாம். தமக்கு ஒரு பொருளைத் தந்து உதவிய ஒருவனுடைய கையைப் புகழ்வதும் அல்லது அங்ஙனம் கொடுக்க நினைத்து உதவிய கையுடையவனையே புகழ்வதும் இரண்டும் ஒன்றேதான். இவ்விருவகைப் புகழுரைகளும் ஒருவனையே சென்றடையும் என்பதில் சந்தேகம் இல்லை. கொடுத்த கையினை அன்புரையால் புகழ்கிறோம். கொடுக்க நினைத்தவனை அறிவுரையால் புகழ்கிறோம். முன்னதைப் பக்தி முறை என்றும், பின்னதை ஞான முறை என்றும் சொல்வர். இதனால் ஒரு பொருளை எய்துவதற்கு ஞானம் ஒரு மார்க்கமாகவும், பக்தி ஒரு மார்க்கமாகவும் மக்களாற் மேற்கொள்ளப்பட்டன. இவற்றுள் ஞானம் என்பது சைவ நன்மக்களாலும், பக்தி என்பது வைணவ நன்மக்களாலும் முதற்பொருளை அடைந்தனுபவிப்பதற்கான வழிகளாக வகுத்துக்கொள்ளப்பட்டன என்னலாம். இது பற்றியே சைவத்தை ஞானமார்க்கம் எனவும், வைணவத்தை பக்தி மார்க்கம் எனவும் பெருவாரியாகப் பேசலுற்றனர். இதுவரையில் சொல்லிவந்த விஷயங்களால், சைவம், வைணவம் என்பன ஒன்றுக்கொன்று மாறுபாடு இல்லாத அநாதியான மதங்கள் என்றும், அந்த அந்த மதத்தினர் தங்கள் தங்கள் கருத்துக்கு ஏற்ப ஞானமார்க்கம் என்றும், பக்தி மார்க்கம் என்றும் இரண்டு மார்க்கங்களால் ஒரே பொருளை அடைவதற்கான வழிகளைக் கோலினர் என்றும் அறியலாம்.

## வேதம் ஏன் :

நூல்கள் எல்லாவற்றிலும் சிறந்தது வேதம்தான். ஏனென்றால் வேதமே மக்களுக்கு அவர்கள் அடையவேண்டியதான ஞானத்தைத் தெரிவிக்கிறது. அந்த நூல் இல்லாவிடில் மக்களுக்கு ஞானத்தைப்பற்றிய எண்ணமே உண்டாகாது. அப்படி ஒருவேளை உண்டானாலும், எது ஞானம் என்பது பற்றிய குழப்பமும் சச்சரவும் வலுத்துப் போம். ஏறக்குறைய மக்களுக்கு முக்கியமானதைத் தெரிவித்து அவர்கள் கருத்தால் ஒன்றுபட்டு இவ்வுலகில் வாழ்வதற்கும், மறுமையில் மேலே சொல்லப்பட்ட பூரண சுகத்தை அடைவதற்கும் வேதந்தான் வழிகாட்டுகிறது என்பதில் தடையில்லை. இதனாலேதான், எல்லாக் கொள்கைகளுக்கும் வேதமே சிறந்த பிரமாணமாகக் கொள்ளப்படுகிறது. இதனைக் கடவுளே அருளிச் செய்தார் என்றும், ரிஷிகள் அருளிச் செய்தார்கள் என்றும் நமக்கு வேண்டுமளவுக்கு வியாசர் முறைப்படுத்தித் தந்தார் என்றும் பெரியோர்கள் சொல்லுகின்றனர். நம்முடைய அறிவு சிற்றறிவு ஆகும். கடவுள் முற்றறிவு உடை

---

நீர்க்குமிழிக்கு யாக்கை நிகர் எனும் வார்த்தை உயர்வு நவிற்சி யன்று. நீர்த்துனி நீரைவிட்டுக் கரையை யடைந்தால் உலர்ந்துபோகும்; "கடலில் நஞ்சுண்டவர் கைவிட்டால் உடலினர் கிடந்தார் முனிபண்டமே."

—மகாத்மா காந்தி

யவர். ஆதலால் நம் சிற்றறிவும் சுட்டறிவும் கொண்டு, சுட்ட முடியாத பேரறிவுடைய முதற் பொருளை நாம் தெரிய ஒண்ணுது. தெரிந்து கொள்ளாமலே இருந்தோமானுல் நன்மை கிட்டாது. ஆதலால் இதத்தை (புருஷார்த்தத்தை)த் தெரிவிக்கும் வேத உணர்ச்சி நமக்கு மிகவும் அவசியமாம். நாம் வீட்டில் இல்லாது வெளியே போயிருந்த வேளை. அந்த வேளையில் நம் வீட்டுக்கு ஒருவர் வந்தார். அவர் நமக்கு ஏதோ நன்மை தெரிவிக்க வந்தவர். அவரை இன்னுரென்று நமக்குத் தெரியாது. அவருக்கு நம்மைத் தெரியும். நம் வீட்டு வாசல் திண்ணையில் நம்முடைய தகப்பனுர், அவர் வந்து தேடின வேளையில் உட்கார்ந்திருந்தார். நாமோ வீட்டில் இல்லை. நம் தந்தையார், வந்தவரை விவரம் கேட்டார். அவர், தான் இன்னுர் என்றும் தான் வந்த விஷயம் இன்னது என்றும் விவரமாக நம் தகப்பனுரிடம் சொல்லிப் போனுர். வந்தவரை நாம் பார்க்கவில்லை. அவர் சொன்னதையும் நாம் நேரே தெரியவில்லை. கொஞ்ச நேரம் சென்ற பிறகு நாம் வீட்டுக்குத் திரும்பி வந்தோம். வந்த பிறகு, நம் தகப்பனுர் நம்மை நாடி ஒருவர் வந்ததும், அவருடைய தோற்றமிருந்த விதமும், அவர் சொல்லிப் போனதும், ஆகிய எல்லாவற்றையும் நமக்கு விவரமாகக் கூறினுர். இப்படி நம் தகப்பனுர் எடுத்து நமக்குச்சொல்லாவிட்டால் வந்தவரைப் பற்றியும், அவர் நமக்குக் கூறிச் சென்ற உறுதியைப் பற்றியும் நாம் சற்றும் தெரிந்துகொள்ள முடியாது. நம் தகப்பனுரும், வந்த அவர்தான் இன்னுர் என்றும், வந்த காரியம் இன்னது என்றும், தன்னைப் பற்றித் தானே தெரிவித்துக் கொள்ளாமற் போயிருப்பாரானுல் ஒன்றும் தெரிந்துகொண்டிருக்க மாட்டார்; நமக்கும் விவரம் தெரிவிக்க முடியாதவர் ஆவர். இப்படித்தான், கடவுள், தம்மைப் பற்றி நமக்குத் தெரிவிக்க வேண்டுவனவற்றை (நாம் தோன்று முன்னமே) தெரிவித்திருக்க வேண்டும். இதனுலேயே, வேதம் இறைவனுலே சொல்லப்பட்டது, மனிதரால் செய்யப்படாதது என்றனர். இறைவன் அருளிச் செய்த இந்த வேதவாசகங்களைக் கேள்வியுற்ற பழைய ஞானிகளாகிய ரிஷிகளே அவற்றைப் பரம்பரையாக நமக்கு உணர்த்தலாயினர். இங்ஙனம் கேள்வி வழியாக வந்த சுருதியை ரிஷிகள் செய்தருளினர் என்று பெரியோர்கள் கூறுவர். எப்படியாயினும் வேதத்தின் உற்பத்தி இறைவனிடமிருந்து தான் என்பது கருதினுல் விளங்காமற் போகாது. ஒரு செய்தியைப் பற்றிப் பல பேர்வழிகள் பேசுவாராயின் வேறுபாடுகள் தோன்றக்கூடும். அங்ஙனம் தோன்றும் வேறுபாடுகளை முரண்படாமலிருப்பதற்காக வகைப்படுத்தி ஆகவேண்டியுள்ளது. அந்தத் தொண்டினை வியாசர் செய்தனர் என்பர். இதுவரையில் சொல்லியவற்றுல் வேதம் என்பது எது என்பதும் அதன் ஆசிரியர் யார் என்பதும் அதன் துணை நமக்கு மிகவும் வேண்டுவது என்பதும் ஒருவாறு புலப்படும். வேதங்கள் நான்காம். அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், என்பன.

(தொடரும்).



---

அவனன்றி ஓரணுவு மசையாது எனும் ஆப்த மொழியில் நம்பிக்கையுடையவன் யான். எனவே அவன் விருப்பத்திற்கு மாருக என் உடலை யாரும் காப்பாற்ற முடியாது. யான் செய்வது அவன் வேண்டும் பணியேயாம்.

—மகாத்மா காந்தி.

---

# சிதம்பரம்

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே

—சம்பந்தர்.

திருவாரூர்ப் பிறக்கமுத்தி, தில்லையைத் தெரிசிக்கமுத்தி, திருவண்ணாமலையை நினைக்க முத்தி, காசியில் இறக்க முத்தி என்பது பழமொழி. பார்க்கமுத்தி தருவதான சிதம்பரத்திற்குப் பல திருப்பெயர்கள் உண்டு. தில்லைச் செடிகள் நிறைந்த வனமாக இருந்தபடியால் **தில்லை** யென்றும், புலிக்கால் முனிவர் (வியாக்கிரபாதர்) வழிபட்டதால் **புலியூர்** என்றும், சிதாகாசத்தில் நடராஜர் ஆனந்ததாண்டவம் செய்வதால் **சிற்றம்பலம்** என்றும், இறைவனிடம் பெரும்பற்றை உண்டாக்கவல்ல தலமானதால் **பெரும்பற்றப்புலியூர்** என்றும், விராட் புருடனுக்கு இருதய கமலமாக விளங்குகிறபடியால் **புண்டரீகபுரம்** என்றும், சபை பொன்னோடுகளால் வேயப்பட்ட காரணத்தால் **பொன்னம்பலம்** என்றும், சைவ சமயாச்சாரியார்களால் பாடப்பெற்ற திருமுறைகளைக் கண்டெடுத்தபின் **கோயில்** என்றும் இன்னும் பலவாறாக வழங்கப் பெறுகிறது. கோயில் என்றால் எல்லாக் கோயில்களுக்கும் பொதுவாகப் பொருந்தும் என்றாலும் சிதம்பரம் கோயிலுக்கே சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. வைணவர்கள் இதைத் **திருச்சித்திரகூடம்** என்பர். மகம்மதியரும் கூட இதற்கு **சிலைமான்தகத்** என்று பேரிட்டிருக்கின்றனர்.

பூலோக கயிலாயமாகக் கருதப்படும் இப்பதி பஞ்சபூதத் தலங்களில் ஆகாயலிங்க க்ஷேத்திரம். கனகசபை (பொன்னம்பலம்—சிதம்பரம்), இரசித சபை (வெள்ளியம்பலம்—மதுரை), தாமிர சபை (திருநெல்வேலி), சித்திரசபை (திருக்குற்றாலம்), இரத்தினசபை (திருவாலங்காடு) என்ற இந்த ஐந்து சபைகளில் ஒன்று. ஆறு ஆதாரத்தலங்களில் ஒன்று. உலகமாகிய புருடனுக்குத் திருவாரூர் மூலாதாரம்; திருவானைக்கா கொப்பூழ்; திருவண்ணாமலை மணிபூரகம்; சிதம்பரம் இருதயம்; திருக்காளத்தி கண்டம்; காசி புருவமத்திமம்.

பதஞ்சலியுடன் ஒருகாலத்தவரான திருமூலர் கி. மு. ஆறாம் நூற்றாண்டில் இருந்தவர் என்று கருதினால் அவர் பாடிய திருமந்திரத்தில் திருவம்பலம், திருக்கூத்து முதலிய பகுதிகளைக் கொண்டு சிதம்பரம் அக்காலத்திலேயே பெருமை பெற்றிருந்தது என்று கொள்ளலாம். திருவாசகம், திருக்கோவையார் பாடிய மாணிக்கவாசகர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டினர் என்று கொண்டால் சிதம்பரம் அதற்கு முற்பட்டதாக இருந்திருக்க வேண்டுமென்று கருதலாம். கோயிலிலுள்ள கட்டிடங்கள், சிற்பங்கள் இவைகளின் அமைப்பைக் கூர்ந்து ஆராய்ந்தமேல் நாட்டறிஞர்கள் கோயில் ஐந்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகவே இருக்கவேண்டும் என்று எண்ணுகிறார்கள். ஆதலின், சிதம்பரம் பழம்பெருமை வாய்ந்தது என்பதில் ஐயமில்லை.

கோயில் ஊர் நடுவே நான்கு ஒழுங்கான அகலமான தேர்வீதிகளுடன் 40 ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்திருக்கிறது. நான்கு கோபுரங்களும் வீறுபெற நின்று விளங்குகின்றன. பொதுவாக எல்லாக் கோயில்களும் கிழக்கு மேற்கில் நீளமானவையாக இருக்கும். ஆனால் இக்கோயில் தெற்கு வடக்கில் நீண்டிருப்பது ஒரு சிறந்த தனிச் சிற்ப அமைப்பு என்கின்றனர். கோயில் மதில்கள் மூன்றாங் குலோத்துங்கன், மதுரை—வீரப்ப நாயக்க மன்னன், பச்சையப்ப முதலியார் இவர்களால் கட்டப்பட்டது என்றும், செப்பனிடப்பட்ட தென்றும் அறிகிறோம்.

ஆலம். 'திருச்சிற்றம்பலக் கோவையார்' என்றும் அதற்குப் பெயர். ஒவ்வொரு பாட்டிலும் தில்லையின்பேர் வருகிறது. இன்னும் **சேரமான் பெருமாள் நாயனுர்** 'பொன்வண்ணத் தந்தாதி' பாடியிருக்கிருர். **பட்டினத்தடிகள்** 'கோயில் நான்மணி மாலை' அருளியுள்ளார். **சேந்தனுர்** 'திருப்பல்லாண்'டை இயற்றியிருக்கிருர். கண்டாரதித்தர், திருமாளிகைத் தேவர், புருடோத்தம நம்பி, திருவாலியமுதனுர், வேணுட்டடிகள், பூந்துருத்திநம்பி நாடக நம்பி, கருவூர்த்தேவர், சேதிராயர் இவர்கள் 'திருவிசைப்பா'வை இசைத்துள்ளனர். **நம்பியாண்டார் நம்பிகள்** 'கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தம்' என்ற நூலை அருளியுள்ளார். இவர்தான் இராஜராஜ சோழன் வேண்டுகோட்படி, திருநாரையூர் பொல்லாப்பிள்ளையாரின் திருவருள் துணைகொண்டு, திருமுறைகள் இருக்குமிடம் தெரிந்து, தில்லையில் எட்டுச்சுவடிகள் அறையின் கதவுகளைத் திறந்து திருமுறைகளை எடுத்தவர். மூவர் தேவாரங்களையும் ஏழு திருமுறைகளாக வகுத்தவரும் இவரே. அரசனுக்கும் இதனுல் திருமுறை கண்ட சோழன் என்ற பேர் வந்தது. **சேக்கிழார்** பாடிய பெரியபுராணத்துக்கு இறைவனே "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்த பெருமை தில்லைப் பெரும்பதிக்கே உரியது. 'திருக்களிற்றுப்படியார்' என்ற நூலைத் **திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனுர்** இயற்றினுர். உமாபதி சிவனுர் 'கோயிற்புராணம், கொடிக்கவி' இவைகளை அருளினுர். **இரட்டைப் புலவர்கள்** 'தில்லைக்கலம்பக'த்தையும், **புராணத்திருமலை நாதர்** 'சிதம்பர புராண'த்தையும், **குமரகுருபர சுவாமிகள்** 'சிதம்பரமும் மணிக்கோவை, சிதம்பர செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை' என்ற நூல்களையும் இயற்றியிருக்கின்றுர்கள். நான்கு கோபுர வாயில்கள்பக்கம் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானை **அருணகிரிநாதர்** திருப்புகழ்ப் பாடல்களில் பாடியுள்ளார். மகாவித்துவான் **மீனுட்சிசுந்தரம்பிள்ளை** 'திருத்தில்லையமக அந்தாதி' என்ற நூலைச் செய்திருக்கிருர். வடலூர் **இராமலிங்க அடிகள்** அருளிய திருவருட்பாவில் பல பாடல்கள் தில்லைப்பொதுவில் திருநடம்புரியும் ஈசனைப் பற்றியனவே. ஆசிரியர்கள் பேர் தெரியாத 'தில்லையுலா,' 'சிதம்பரவிலாசம்' என்ற அழகிய நூல்கள் இருக்கின்றன. கோபாலகிருஷ்ண பாரதியார் நந்தனுர் சரித்திரக் கீர்த்தனை பாடியிருக்கிருர். இன்னும் பல புலவர்கள் தனிப்பாடல்கள் பாடியுள்ளனர். சிதம்பரத்தைப்பற்றிய பல வடமொழி நூல்களும் உண்டு.

நடராஜப் பெருமானுக்கு ஒரு ஆண்டில் ஆறு தடவைகள்தான் அபிஷேகம் நடைபெறும். சித்திரைத் திருவோணம், ஆனி உத்திரம், ஆவணி சதுர்த்தசி, புரட்டாசிச் சதுர்த்தசி, மார்கழித் திருவாதிரை, மாசிச் சதுர்த்தசி இந்த நாட்களில் நடைபெறும். ஆனித் திருமஞ்சனமும், மார்கழித் திருவாதிரையும் மிகவும் முக்கியமான விழாக்கள். அந்த நாட்களில் நடராஜப் பெருமான் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து எழுந்தருளுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

ஆலய நிர்வாகம் சோழ மன்னர் காலத்தில் அரசனுடைய நேர்பார்வையில் இருந்து வந்தது. பின்னர் அரசனுல் நியமிக்கப்பட்ட கண்காணிப்புச் சபையாரின் பாதுகாப்பில் இருந்தது. அதற்குப் பிறகு தில்லை மூவாயிரவர்களின் வழி வழி வருகின்ற தீட்சிதர்கள் ஆட்சியில் இருந்து வருகிறது, சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று போற்றியது இம்மரபினரைத்தான்.

இக்கோயிலில் சோழர், பாண்டியர்,சேரர், விஜய நகர மன்னர், நாயக்க மன்னர் இவர்களின் கல்வெட்டுக்கள் பல உள்ளன. இவை பெரும்பாலும் நந்தவனங்கள், அறச்சாலைகள் அமைத்ததைப்பற்றியும், பூசை வழிபாட்டுக்குரிய நிவந்தங்கள் விடப்பட்டதையும் குறிக்கின்றன. அரசர்கள் கோபுரங்கள், மண்டபங்கள் முதலிய திருப்பணிகள் செய்ததையும், பொன்வேய்ந்ததையும், அரசர்களின் வெற்றிகளையும் இன்னும் பலவாருன செய்திகளையும் தெரிவிக்கின்றன. மாசிமகத்தன்று திருத்

---

மகாத்மா என்று கூறும் எனது பட்டம் பயனற்றது. ஆனுல் என் கொள்கைகளான வாய்மை, அஹிம்சை, பிரம்மச்சரியம் இவைகள் ஒரு சிறிதும் புறக்கணிக்கத் தக்கனவல்ல. அவைகளால் பெரும் பயனுண்டு.

—மகாத்மா காந்தி.



ஸ்ரீரங்கநாதர்

# திருவரங்கம்

கொண்டல் வண்ணனைக் கோவல ஞய் வெண்ணெய்
உண்ட வாயன்என் னுள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோனணி யரங்கன்என் னமு தினைக்
கண்டகண்கள் மற்ருென்றினைக் காணுவே
— திருப்பாணுழ்வார்.

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே
— தொண்டரடிப்பொடியாழ்வார்.

ஆழ்வார்களால் மங்கள சாசனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்கள் நூற்றெட்டு. அவைகளில் தலைசிறந்து விளங்குவது ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கம். இதைப் பெரிய கோயில் என்றும் வழங்குவர். சைவர்கள் "கோயில்" என்ருல் எப்படி சிதம்பரத்தைக் குறிக்கிருர்களோ அப்படியே வைணவர்கள் "கோயில்" என்ருல் திருவரங்கத்தையே கொள்கிருர்கள். பேயாழ்வார் 3-ம் திருவந்தாதியில் "பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம் கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல்" என்று கூறுகிருர். நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் இந்த ஒரு தலத்தை மட்டும்தான் எல்லா ஆழ்வார்களும் பாடி இருக்கிருர்கள். இது பழம் பெருமையையுடையது. இராமபிரானுல் விபீஷணனுக்குக் கொடுக்கப்பட்ட அரங்கநாதர் திரு உருவம் இங்கு எழுந்தருளப் பெற்றிருக்கிறது. இதைப்பற்றி வான்மீகர் தமது இராமாயணத்தில் கூறியிருக்கிருர். தமிழில் ஐம்பெருங் காவியங்களில் ஒன்ருன சிலப்பதிகாரத்தில் இத்தலத்தில் திருமால் பள்ளிகொண்டிருப்பதை வெகு அழகாகக் கீழ்வருமாறு கூறப்பட்டு இருக்கிறது.

"நீலமேக நெடும்பொற்குன்றத்துப் பால் விரிந்தகலாது படிந்ததுபோல ஆயிரம் விரித்தெழுதலையுடை அருந்திறற் பாயற்பள்ளிப் பலர் தொழுதேத்த விரிதிரைக்காவிரி வியன்

---

தொண்டத் தொகை பாடவும், சோழகுல வல்லி என்ற பெண் நாயன்மார்களின் பாமாலை பாடவும் செய்த ஏற்பாடுகளைப்பற்றிய கல்வெட்டுக்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவை.

சிதம்பர விலாசம் என்ற அழகிய சிறு நூலில் நாம் எல்லோரும் இப்பதியை வணங்கிப் பேறு பெறவேண்டும் என்பதைக் கீழ்க் காணுமாறு கூறப்பட்டிருக்கிறது:—

" தில்லை மாநகர் எல்லை காண்கினும்
என்பொழுதாகிலும் உளப்பட நினையினும்
நேச மாகவும் நாவினுல் பேசினும்
சிதம்பரம் என்றசொற் செவியினிற் கேட்பினும்
இறையினைக் கொடுக்கும் பிறவி சாகரக்
கருவடி அறுத்துத் திருவடித் தாமரை
நீழலில் வாழ்வது நிச்சயந் தானே."

ஆதலின் எல்லையற்ற பெருமைபெற்ற தில்லையம்பதியை வழிபட்டு கூத்தப்பெருமான் திருவருளுக்குப் பாத்திரமாவோமாக.

---

உஷ்ண சக்தி அடங்குமேயானுல் உயிர்ச்சக்தியாக மாற்றப் பயன்படுவதுபோன்று, கோபத்தை அடக்கினுல் அதனுல் பெறப்படும் சக்தி உலகத்தையே அசைக்கவல்லது. —மகாத்மா காந்தி

பெருந்துருத்தித் திருவமர் மார்பன் கிடந்த வண்ணம்"—பொன்மலைமீது நீலமேகம் படிந்து கிடப்பதுபோல ஆயிரந்தலையுடைய பாம்பணையின்மீது காவிரியாற்றுத் திருவரங்கத்தில் திருமகளை மார்பிடங்கொண்ட திருமால் பள்ளிகொண்ட திருக்கோலம் என்பது இதன் பொருள். "தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்" என்று பெரியாழ்வார் பெருமிதத்துடன் பாடுகிறார். தென்னாட்டினரேயன்றி வடநாட்டவரும் வந்து வணங்குவதை இப்போதும் நாம் காண்கிறோம். பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் தாம் பாடிய "நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் முதல் பாட்டில் "சீர்வந்த உந்தித்திசை முகனால் அல்லாது என் சோர்வந்த சொல்லில் சுருங்குமோ ஆர்வம் அங்கு அங்கு ஒயில், உகந்து அவரை ஆள்வான் திரு அரங்கம் கோயில் சிறப்பு" என்று இப்பதியின் பெருமை சொல்லுதற்கரிது என்கிறார்.

கங்கை, காவேரி, யமுனை, சரசுவதி இவர்களுக்குள் யார் பெரியவள் என்ற பூசல் உண்டாயிற்று. பகவான் கங்கையே பெரியவள் என்றார். சினங்கொண்ட காவேரி தன்னைக் கங்கைக்கு மேற்பட்டவளாகச் செய்து கொள்ள வேண்டுமென்று தவம் கிடந்தாள். அவள் தவத்திற்கு மகிழ்ந்து "நாம் ஒருகாலத்தில் உன் மடியில் பள்ளிகொள்வோம். அப்போது நீ கங்கையினும் சிறந்தவளாவாய்" என்று வரம் அளித்தார். காவேரி ஆற்றின் இரு பிரிவுகளுக்கிடையில் ஒரு தீவு உண்டாயிற்று. அதுவே அரங்கம் எனப் பெயர் பெற்றது.

பாற்கடலில் பள்ளிகொண்ட பரமன் உருவ வழிபாடு உண்மை உணர்ந்து உலக மக்கள் உய்யவேண்டும் என்று திருவுளங் கொண்டார். அனந்தசயனன், பத்மநாபன், சபாநாதனை அரங்கநாதன் என்பதில் கடைசியான அரங்கநாதமூர்த்தி உருவமே இங்குக் கொண்டிருப்பதாக ஐதீகம். அவருடைய அவ்வெண்ணம் உருவெடுத்தாற்போல அரங்கநாதனோடு கூடிய அரங்க விமானமும் உண்டாயிற்று. அதை அவர் பிரமனுக்கு அளித்தார். நான்முகன் அதை அயோத்தியை யாண்ட இக்ஷ்வாகுக்குக் கொடுத்தார். அந்தக் குலத்தில் வந்த இராமபிரான் விபீஷணனுக்கு அதை இலங்கைக்கு எடுத்துப் போகக் கொடுத்தார். எடுத்துப் போகும் வழியில் விபீஷணன் ஆற்றின் தீவில் சந்திர புஷ்கரணி, அநந்தபீடம் இருந்த தூய்மையான இடத்தில் வைக்க அதை மறுபடியும் எடுக்க முடியாமற் போயிற்று. இது உச்சிப் பிள்ளையாரின் திருவிளையாட்டால் நடந்ததாகவும் ஒரு கதையுண்டு. "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி" என்று தொண்டரப்பொடியாழ்வாரும், "மன்னுடைய விபீடணற்காய் மதிள் இலங்கைத் திசை நோக்கி மலர்க்கண் வைத்த என்னுடைய திருவரங்கன்" என்று பெரியாழ்வாரும் கூறியிருப்பது இக்கதைக்கு ஆதாரமாக உள்ளது.

பதினான்காம் நூற்றாண்டில் மகம்மதியர் தென்னாட்டில் படையெடுத்து வந்தபோது அர்ச்சகர்கள் பயந்து, விக்கிரகத்தை எடுத்துக்கொண்டு, மைசூர் நாட்டில் திருநாராயணபுரத்தில் சிலகாலம் வைத்திருந்து பின்னர் திருப்பதியில் கொண்டுபோய்ச் சேர்ப்பித்தார்கள். மகம்மதியர் கலகம் ஒழிந்ததும், விஜயநகர மன்னன் இரண்டாவது கம்பண்ணனுக்கு அமைச்சராக செஞ்சியி லிருந்த கோபண்ண உடையார் என்பவர் திருப்பதியிலிருந்து விக்கிரகத்தை எடுத்து வந்து செஞ்சிக்கருகிலுள்ள சிங்கவரம் கோயிலில் கொஞ்சகாலம் வைத்திருந்து பின்னர் திருவரங்கத்தில் பிரஷ்டை செய்தார். "குரு பரம்பரைப் பிரபாவம்" என்ற நூலில் இந்தச்செய்தி கூறப்பட்டிருக்கிறது. இதுவன்றி, கோயிலின் இரண்டாம் பிரகாரத்தின் கீழ்ப்புறச் சுவரில் கோபண்ண உடையாரின் வடமொழிக் கல்வெட்டொன்றில் இந்த விவரம் இருக்கிறது. அப்படி பிரதிஷ்டை செய்தது சக 3912 (கி. பி. 1371-72) பரிதாபி ஆண்டு வைகாசி 17-ம் நாள் என்று திட்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதுமுதல் அரங்கநாதன் அநந்தகோடி மக்களுக்கு சேவை சாதித்தருளிக்கொண்டிருக்கிறார்.

---

உண்மைப்பாதை கத்திமுனைமீது நடப்பதை யொத்த வழியேயாயினும் எனக்கு அது சுலபமானதும் விரைவானதுமாக இருக்கிறது.

—மகாத்மா காந்தி.

கோயிலின் அமைப்பும் சிற்பவேலைப்பாடு களும் மிகவும் அருமையானவை. ஏழு பிர காரங்கள் உள்ளன. இவைகள் ஏழு உலகங் களைக் குறிக்கும் என்பர். எட்டெழுத்திலுள்ள பிரணவம் விமானம் ஆகவும் நமோ நாராய ணாய என்ற ஏழெழுத்துக்களும் ஏழு பிரகாரங் களாக அமைந்திருப்பதாக திவ்வியகவி பிள் ளைப்பெருமாள் அய்யங்கார் திருவரங்கத்து மாலையில் பின்வருமாறு கூறுகிறார்:—"அரு மறை ஓதிய ஓர் எட்டெழுத்தும்...எங்கோன் விழிதுயில் கொண்டருளத் திருமதிலேழும் விமானமுமாகிச் சிறக்கின்றனவே" முதற்பிர காரம் தர்மவர்மன் என்ற சோழ மன்னனால் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இரண் டாவது பிரகாரம் இராஜமகேந்திரன் திருச் சுற்று என்ற பேருடையது. மூன்றாவது குல சேகரன் திருவீதி குலசேகராழ்வாரால் கட்டப் பட்டது. நான்காவது பிரகாரம் ஆலிநாடன் திருவீதி, திருமங்கையாழ்வாரால் உண்டாக் கப்பட்டது. ஐந்தாவது அகளங்கன் திருவீதி. அகளங்க நாட்டாழ்வான் என்பவனால் ஆக் கப்பட்டது. ஆறாவது திருவிக்கிரமன் திரு வீதி. இது திருவிக்கிரம சோழனால் கட்டப் பட்டது. ஏழாவது சித்திரை வீதியென்றும் "மாடமாளிகை சூழ்திருவீதி" என்ற பேரு டையது.

பரமபதநாதன், இராமசாமி, பட்டாபி ராமன், கிருஷ்ணன், விட்டல் கிருஷ்ணன், வேணுகோபாலன், பார்த்தசாரதி, வாசுதேவப் பெருமாள், மேட்டு அழகியசிங்கர், திரு அரங்க நாச்சியார், அனுமார், அமிருதகலசகருடன், கூரத்தாழ்வார், சக்கரத்தாழ்வார், இவர் களின் சந்நிதிகள் கோயிலில் முக்கியமாகப் பார்க்கவேண்டியவை. இன்னும், முதலாழ் வார் மூவர், திருமழிசையாழ்வார், திருப்பா ணாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், உடையவர் (இரா மானுஜர்), நாதமுனிகள், திருக்கச்சிநம்பி, பிள்ளை லோகாசாரியார், வேதாந்த தேசிகர், பெரியவாச்சான் பிள்ளை, தன்வந்திரி, குல சேகர நாச்சியார், துலுக்கநாச்சியார், இவர்க ளுடைய கோயில்களும் இருக்கின்றன. ஆயி ரக்கால் மண்டபம், கல் குதிரை மண்டபம், கருடமண்டபம், அரங்க விலாசம், வசந்த மண்டபம், பூச்சாத்துமண்டபம், திருப்பவித் திர மண்டபம், ஊஞ்சல் மண்டபம், அர்ச்சுன மண்டபம், ரேவதி மண்டபம், கிளி மண்டபம், அழகிய மணவாளன் மண்டபம், காயத்திரி மண்டபம், கண்ணாடி அறை, இவைகள் பார்க் கத்தக்கவை. சந்திரபுஷ்கரணி திருக்குளமும், புன்னைமரமும் சிறப்புடையன. கோயிலில் இருபத்தொரு கோபுரங்கள் உள்ளன. "வெள்ளைக் கோபுரம்" என்னும் கீழ்க் கோபுரமே மிகவும் உயர்ந்தது (165 அடி.) தாமோதர கோபுரமும், இராயர் கோபுரமும் மிகவும் அழகாக உள்ளவை.

இந்தக் கோயிலில் நடக்கும் திருவிழாக் களில் மிகவும் சிறந்தது மார்கழி மாதத்தில் நடைபெறும் வைகுண்ட ஏகாதசித் திரு விழாதான். ஏகாதசி தேவதை சில அசுரர் களின் மீது பெற்ற வெற்றியைக் கொண்டாடு வதற்கே இவ்வாறு செய்வதாகக் கூறப்படு கிறது.

திருவரங்கத்தில் சந்திர புஷ்கரணியுடன் பில்வ தீர்த்தம், ஜம்பு தீர்த்தம், அசுவத்த தீர்த்தம், பலாச தீர்த்தம், புன்னாக தீர்த்தம் வருண தீர்த்தம், கதம்ப தீர்த்தம், ஆம்ர தீர்த்தம் என்ற நவதீர்த்தங்கள் உள்ளன.

இத்தலத்தில் பெரிய பெருமாளை வழி பட்டுப் பேறு பெற்றவர்கள் பலர். அதில் முதலிடம் பெறுபவர்கள் திருப்பாணாழ்வாரும் ஆண்டாளும் ஆவர். பாணர் குலத்தவ ரான திருபபாணாழ்வார் நாள்தோறும் காவிரி யில் மூழ்கி திருமுகத்துறைக் கெதிரில் வீணை மீட்டி எம்பெருமான் திருப்புகழைப் பாடும் நியமம் உடையவராக இருந்தார். ஒருநாள் லோகசாரங்கர் என்னும் அர்ச்சகர் திருமஞ் சனம் எடுக்கச் செல்லும்போது ஆழ்வாரை விலகச் சொன்னார். அரங்கநாதரிடம் பக்திப் பரவசத்தால் மனதைப் பறிகொடுத்த அவர் காதில் அது விழவில்லை. அர்ச்சகர் கற்களை எடுத்து அவர் மீதெறிந்தார். பகவான் நெற் றியில் இரத்தம் பெருகியது. லோகசாரங் கரும் ஆழ்வாரைத் தோளில் ஏற்றிக்கொண்டு பெருமான் திருமுன் கொண்டுபோக, ஆழ் வார் 'அமலனாதி பிரான்' என்று தொடங்கிப்

பல பாவச் செயல்களை நான் வெளிப்படையாக ஒப்புக்கொண்டுள்ளேன். எனவே என்னை அவைகள் பாதிப்பதில்லை. இறைவழி நின்று வாழ்க்கையை நடத்துவதால் அபாயமின்றி வாழ் கிறேன்.
—மகாத்மா காந்தி.

பாடினர். பெருமானும் அத்திருமேனியோடு அவரை அங்கீகரித்துக் கொண்டார்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் துளசிச் செடியின் கீழ் ஒரு திருமகள் தோன்றினர். பெரியாழ்வார் அக்குழந்தையை எடுத்துக் கோதை என்று பெயரிட்டு வளர்த்தார். பெரியாழ்வார் பெருமானுக்குக் கட்டும் பூமாலையை ஆண்டாள் அணிந்து கொண்டிருப்பதைப் பார்த்துக் கோபித்தார். பகவான் ஆழ்வார் கனவில் தோன்றி அது தமக்கு உகந்ததென்றும், அவ்வம்மையாரைத் தம்மிடம் சேர்ப்பிக்கும்படியாகவும் அருளினர். பெரியாழ்வார் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியைத் திருவரங்கம் அழைத்துச் செல்ல அத்திருமகளைப் பகவான் ஐக்கியம் செய்துகொண்டார். ஆண்டாள் பாடிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி மிகவும் சிறந்தவை.

உடையவர் என்னும் இராமானுஜர் இத்தலத்தில் வாழ்நாளின் கடைசி காலத்தைக் கழித்தார். அவருடைய மகா சமாதிதான் இவருடைய கோயில். அவர் உயிருடனிருந்தபோது உடுத்திய காவி உடைகளைப் பயன்படுத்தி அவருடைய திருவுருவம் அமைக்கப்பட்டிருப்பது சிறப்பானது. மற்றும் பல வியாக்கியான கர்த்தர்களும் வைணவ சமயாசாரியார்களும் இத்தலத்தில் வழிபாடாற்றி யிருக்கின்றனர்.

இந்தக் கோயிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. இவை 9-ஆம் நூற்றுண்டு முதல் 16-ஆம் நூற்றுண்டுவரை சம்பந்தப்பட்டவை. சோழ, பாண்டிய, சேர, ஓய்சள, விஜயநகர மன்னர்களின் காலத்திய கல்வெட்டுக்கள். கோயிலை ''அரங்கத்துப் பெருமானடிகள்'' என்று கூறுகின்றன. அவைகளில் கோயில் கண்காணிப்பையும், அரசர் முதலியவர்கள் திருவிளக்கு, திருநந்தவனம் இவைகளுக்காக ஏற்படுத்திய நிவந்தங்களையும் அரசர்களுடைய வெற்றியையும் கூறப்பட்டிருக்கின்றன. முதலாம் குலோத்துங்க சோழன் (கி. பி. 1070-1118) கல்வெட்டொன்றில் திருப்பள்ளி எழுச்சிக்குக் குலசேகராழ்வார் செய்த திருவாய்மொழி மூன்று நாட்களில் சொல்ல ஏற்பாடு செய்திருந்தது குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

வேதங்களாலும் விளக்கமுடியாதவன் திருவரங்கப் பெருமான் என்கிருர் **பொய்கையாழ்வார். பூதத்தாழ்வார்** பகாசூரனைக் கொன்ற கண்ணன் என்பார்.

**பேயாழ்வார்** மூவுலகும் ஈரடியால் அளந்த வாமனன் எனச் சொல்கிருர்.

**திருப்பாணுழ்வார்** ''அண்டர் கோன் அணியரங்கன் என்அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே'' என்று கூறுகிருர்.

**திருமழிசையாழ்வார்** பிரளய காலத்தில் பாற்கடலில் பள்ளிகொண்ட பரமன் எனப் பகர்கிருர்.

**குலசேகராழ்வார்** பகவான் பள்ளி கொள்ளும் ஆதிசேடன் தலையிலுள்ள இரத்தினமே இருளையோட்டி ஒளிவிளங்கச் செய்கிறதென உரைக்கின்ருர்.

**பெரியாழ்வார்** வீபீஷணருக்காகத் தென்னிலங்கைத்திசைநோக்கித் திருக்கண் வைத்தார் எனச் செப்புகின்ருர்.

**தொண்டரடிப் பொடியாழ்வார்** ''அச்சுதா அமரரேறே, ஆயர்தம் கொழுந்தே என்னும், இச்சுவை தவிர யான்போய் இந்திரலோக மாளும், அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே,' என்று பாடுகிருர்.

**நம்மாழ்வார்** தேவர்களுக்கு அமுதம் கொடுக்க கூர்மாவதாரம் எடுத்ததையும் சொல்கிருர்.

**திருமங்கையாழ்வார்** ''உந்திமேல் நான் முகனைப் படைத்தான் உலகுண்டவன் எந்தை பெம்மான்'' என்றருளுகிருர்,

**ஆண்டாள்** ''கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர், செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனர்,எப்பொருட்கு நின்ருர்க்கு மெய்தாது நான்மறையின், சொற்பொருளாய் நின்ருரென் மெய்ப்பொருளும் கொண்டாரே'' எனப் பாடுகிருர். திவ்விய கவிப் பிள்ளைப்பெருமாள் அய்யங்கார், அஷ்டப்பிரபந்தத்தில் திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்துமாலை, திருவரங்கத்தந்தாதி சீரங்க நாயகர் ஊசல் என்ற நான்கு நூல்களை இயற்றி யிருக்கிருர். கம்பர் தமது இராமாயணத்தை இக்கோயிலில் தான் அரங்கேற்றினர். இத்தகைய அளவிடற்கரிய மகிமை வாய்ந்த தலத்தை வழிபட்டுய்வோமாக.

# பழநி

படிக்கின்றிலை பழனித் திருநாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை முருகா வென்கிலை முசியாமலிட்டு
மிடிக்கின்றிலை பரமானந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின்றிலை நெஞ்சமே தஞ்சமேது நமக்கினியே
(கந்தரலங்காரம்)

தமிழ்க் கடவுளான திருமுருகன் கோயில் கொண்டிருக்கும் பல தலங்களில் தலைசிறந்தது பழநியம்பதி. இதற்கு சிவகிரி, பழநுபுரி, பொதினி என்ற பெயர்களும் உண்டு. தமிழ்ச் சங்க நூலாகிய அகநானூற்றிலே இந்தப்பதி "பொதினி" என்று கூறப்பட்டிருக்கிறது. அந்தச் சொல்லே மருவிப் பழனியென்ருயிற்றென்பர். பழனங்கள் (வயல்கள்) சூழ்ந்த இவ்வூர் பழனி என்றும் கூறுவர். மலைக்கோயிலிலுள்ள பாண்டிய மன்னர் கல்வெட்டில் வைகாவூர்நாட்டுப் பழநிமலை என்று குறிக்கப்பட்டிருக்கிறது. பழநி என்று பேர் வந்ததற்குப் புராண கதையும் உண்டு. திருக்கயிலையில் சிவபெருமானைக் காணச் சென்ற நாரதர் ஒரு மாதுளங் கனியை அவர் திருமுன் வைத்தார். பக்கத்தில் அமர்ந்திருந்த இரண்டு திருக்குமாரர்களையும் நோக்கி "யார் உலகை முதலில் சுற்றி வருகின்ருரோ அவருக்கு இக்கனியைக் கொடுப்போம்" என்று பரமசிவன் மொழிந்தருளினர். உடனே முருகன் மயில்மீது புறப்பட்டார். அவர் உலகை வலம் வருமுன், விநாயகர் தம் பெற்றோர்களைச் சுற்றிவந்து பழத்தைப் பெற்ருர். முருகன் இதைக் கண்டு சினங்கொண்டார். இறைவனும் தேவியும், "பழம் நீயாயிருக்க உனக்கு வேறு பழமும் வேண்டுமோ" என்று கூறினர். அப்படியும் ஆறுதல் அடையாமல் திருவாவினன்குடி வந்து சிலகாலம் தங்கிப் பிறகு பழநியங்கிரிமீது தங்கி அருள் வழங்கி வருகிருர். பழம் நீ என்று அம்மையப்பர் சொன்னபடியால் இத்தலத்திற்குப் பழநி என்று பேர் வழங்கலாயிற்று. இதைப் பழநித் தலப்புராணம்—

" கூறுடையாளுங் குன்ருக் குணப்பெருங்
குன்று ஞானப்
பேருடைப்பழநீ யென்னப் பெயரது
மருவி யெங்கள்
ஆறுமாமுகவன் வைகும் நகரமும்
அன்று தொட்டு
வீறுதொல்பழநீ யென்றே விளம்பின
உலக மூன்றும் "

என்று கூறும்.

இப்பழநிமலை இங்கு உண்டானதற்கு ஒரு புராண வரலாறும் உண்டு. அகத்தியர் கயிலாயத்தில் சிவகிரி, சத்திகிரி என்ற இரு குன்றுகளைத் தரிசித்துத் தென்னுடு வந்தார். இடையில் இடும்பாசுரனையும் அவன் மனைவியையும் கண்டார். இடும்பனை அந்த இருகுன்றுகளை யெடுத்துக் கொண்டு பொதியை மலைக்கு வரச்சொன்ஞர். அவ்வாறே சென்ற இடும்பன் ஒரு தண்டில் இருபக்கத்திலும் குன்றுகளைக்கயிற்றில் கட்டித்தொங்கவிட்டுக்கொண்டு தென்னுடு நோக்கி வந்தான். ஆவினன்குடி அடைந்து அவைகளை கீழே வைத்துச் சற்று இளைப்பாறினன். பிறகு தூக்கிப் பார்த்தான் முடியவில்லை. காரணம் காணச் சுற்றும் முற்றும் பார்த்தான். குன்றின்மேல் குராமரத் தடியில் ஒரு சிறுவன் நிற்பதைப் பார்த்தான் குன்றை விட்டுப் போ எனச் சிறுவனை முனிந்து சொன்னன். "குன்றுகள் என் இருப்பிடம்" என்று அப்பிள்ளை கூறிற்று. இடும்பாசுரன் அக்குழந்தைமேல் பாய முனைந்தான். திருமுருகனுகிய அப்பாலன் கையில் இருந்த தண்டை எறிய இடும்பன் அடிசாய்ந்தான். உயிர்ப் பிச்சை, தாலிப்பிச்சை இவ்வ

---

நம்பிக்கையின்றிக் கடவுளை உணர முடியாது. அவன் அறிவுக்கப்பாற்பட்டவன். தத்தரிசனம் என்று கூறும் ஞான அனுபவத்திற்கும் அடிப்படை நம்பிக்கையேயாகும். நம்பிக்கையின்றி அவ்வனுபவமும் நீடித்திராது.
—மகாத்மா காந்தி.

களை வேண்டிக் குமரனைக் குறை இரந்தனள் இடும்பி. அவரும் அப்படியே அருளினார். உயிர்பெற்ற இடும்பன் இரண்டு வரங்கள் பெற்றான், குராவடி வேலனிடம். ஒன்று, என்றும் அவன் வாயில் காவலனாக இருப்பது; மற்றொன்று தன்னைப்போல் காவடி தாங்கிவரும் அன்பர்கட்கு அருள் சுரப்பது.

இப்பழநிமலை மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்தது. இவ்வூர் கடல் மட்டத்திற்கு 668 அடி உயரத்திலுள்ளது. இம்மலையின் உயரம் 450 அடி. இம்மலையைச் சுற்றிவர $1\frac{1}{4}$ மைல் தொலைவுள்ள ஓர் அழகிய சாலையும் அமைந்துள்ளது. பல சிறு கோயில்களும், சாதுக்களின் மடங்களும், அறச்சாலைகளும், மயில் மண்டபங்களும் அந்த கிரிவீதி மருங்கில் திகழ்கின்றன. மலைக்கு $2\frac{1}{2}$ மைல் தூரத்தே சண்முக நதியெனும் புனித ஆறு ஓடிக் கொண்டிருக்கிறது. இடும்பன்மலை அருகே எழில்பெற நிற்கின்றது. இயற்கை வளங்களின் நடுவே பழநிமலை நிற்கும் காட்சி கண்கவர் வனப்புடையது. அம்மலையின் மணிமுடிபோல் விளங்குவது இளங்குமரனின் திருக்கோயில். இதை யடைய 659 படிகளில் ஏறிச்செல்ல வேண்டும். படி வரிசைகளில் சுமார் கால் பாகம் சென்றதும் யானைப் பாதை என்ற மலை வழிப்பாதை ஒன்றும் பிரிந்து செல்கிறது. அதன் வழியாகவும் சென்று சேரலாம். இது பழமையும் புதுமையும் கலந்து நிற்கும் பான்மைபோலும். மலைமேல் வெளிச்சுற்றில் வலம் வரும்போது ஒருபாங்கர் மலைத்தொடர்ச்சி, மற்றொரு பக்கம் வையாவி புரி ஏரி, இன்னொரு சார் பச்சைப்பசேல் என்று தோன்றும் வயல்கள் இவைகளைக் காணலாம். கரடுமுரடான மலைப் பாறைகள் இறைவன் திருச்சடையையும், பசும் வயல்கள் உமையம்மையின் தோற்றத்தையும், வையாவி புரி ஏரியின் நீர் நடுநாயகமாய் நின்று அருள் சுரக்கும் கந்தன் அருள் வெள்ளம் என்றும் கொள்ளலாம் போல் தோன்றுகிறது.

பழநி ஆண்டவன் சந்நிதி மேற்கு நோக்கியது. திருவாயிலில் நுழைந்து மயில் மணடபம், மணிக்கட்டி மண்டபம் தாண்டி இராஜ கோபுர வாயில் வழியாகப் பாரவேல் மண்டபத்தை அடையலாம். பாரவேல் மண்டபத்தின் கற்றூண்கள் அற்புத சிற்ப அமைப்புடன் பொற்புடன் நிற்கின்றன. அதைத் தாண்டினால் நவரங்க மண்டபத்தைச் சேரலாம். அங்கிருந்து தான் பழநி யாண்டவன் திருக்கோலத்தை வணங்க வேண்டும். அவர் திருவுருவம் போகசித்தரால் நவபாஷாணத்தினால் செய்யபட்டதென்பர். அத்திருமேனி மேல் அபிஷேகம் செய்யப்பெற்ற பால், தேன், சந்தனம் இவைகளை உண்போர் தமக்குள்ள நோய் நீங்கப் பெறுகின்றனர். ஆண்டவனுக்கு அபிஷேகங்களும் பலவித அலங்காரங்களும் எந்நேரமும் நடந்து கொண்டேயிருக்கும். வெவ்வேறு திருக்கோலங்களிலும் திருமேனிப் பொலிவு பார்த்தவர் மனதைப் பரவசப்படுத்தும். முருகன் திருப்பதிகளுக்குள் மிக அதிகமாக மக்கள் வழிபடுவது இந்தக் கோயில் ஒன்றுதான். தமிழ் நாட்டினரேயன்றி மலையாள நாட்டினரும், முஸ்லீம்களும் வந்து வணங்குகின்றனர். அன்பர்கள் கோரிக்கைகள் நிறைவேற முடியிறக்குதல், காவடிகளில் தேன், பால், சர்க்கரை இளநீர், பன்னீர், திருநீறு இவைகளைக் கொண்டுவருதல், பஞ்சாமிர்த அபிஷேகம் செய்தல் இவை இடையறாது நிகழ்ந்த வண்ணம் இருக்கும்.

பழநி முருகனுக்கு வைகாசி விசாகம், ஐப்பசி சஷ்டி, கார்த்திகை கிருத்திகை, தைப் பூசம், பங்குனி உத்திரம் இந்த நாட்களில் சிறப்பாக திருவிழாக்கள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் கார்த்திகை, சஷ்டி, விசாகம், அமாவாசைகளிலும் விழாக்கள் உண்டு. சித்திரை மாதப் பிற்பகுதியிலும், வைகாசித் திங்கள் முற்பகுதியிலும், அக்கினி நட்சத்திர காலத்திலே மக்கள் திரளாக வந்து மலைவலம் வருகின்றனர்.

கோயிலின் உட்பிராகாரத்தில் போகர், மலைக்கன்னிமார், சிவலோக நாதர், அம்பிகை, சண்டேசுவசர் இவர்கள் கோயில்கள் உள்ளன. மிகப்பழைய காலத்திலிருந்து போக சித்தர் மாணவரான புலிப்பாணி முனிவர் மரபினரே ஆண்டவன் திருமேனி தீண்டிப் பூசித்து வந்தனர். பின்னால் திருமலை நாயக்க மன்னனின் அந்தண அமைச்சர் தளவாய் இரா

ஒவ்வொரு மனிதனுள்ளத்திலும் கடவுள் விளக்கத்தைக் காணலாம். மனிதன்தான் அவர் உள்நின்றுணர்த்தும் குரலுக்குச் செவிமடுப்பதில் எதிர்தோன்றினும் காண்பதில்லை.

—மகாத்மா காந்தி.

மப்ப அய்யன் என்பவர் பழநிமலைத் தெரிசனத்திற்கு வந்தபோது புலிப்பாணி மரபினர் கையினால் பிரசாதம் வாங்கக் கூடாதென்று நினைத்து அவர்களை நீக்கி ஆதிசைவ அந்தணர்களைப் பூசைக்கு அமர்த்தினார். இதைப் பற்றிய ஒரு செப்பேட்டுப் பட்டயமும் இருக்கிறது.

கோயில் கர்ப்பக் கிரகத்தின் வடக்கு தெற்கு சுவர்களிலும், வியாழவரிசை மூன்று பக்கங்களிலும் 14, 15-ஆம் நூற்றாண்டினதான பாண்டிய விஜயநகர மன்னர்களின் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவை ஆண்டவன் பூசை வழிபாடுகள் நடைபெறுவதற்காகக் கொடுத்த தேவதானங்களைக் குறிக்கின்றன. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்த சுந்தர மூர்த்தி நாயனாருடன் தோழமை பூண்டிருந்த சேரமான்பெருமாள் நாயனார் இக்கோயில் கர்ப்பக்கிரகமும் நடுமண்டபமும் கட்டினர் என்பர். பழனித்தல புராணத்தில் "சேரர்கோன் ஆலயத்தில் நின்றிலகு பரஞ்சுடரைச் சிந்தை செய்வாம்" என்று கூறப்பட்டிருக்கிறது. கர்ப்பக்கிரகத்தின் வெளிப்பக்கத்துச் சுவரிலேயும் மலைப்படித் தொடக்கத்திலுள்ள சேரவிநாயகர் கோயில் வாசலிலும் அரச உருவத்துடன் குதிரைமீதமர்ந்த கோலத்தில் காணப்படுவது சேரமான் பெருமாளே என்றும் கூறுவர். பிற்காலத்தில் மதுரையை அரசாண்ட நாயக்க மன்னர்களும், பாளையக்காரர்களும் கோயற்றிருப்பணிகள் பல செய்தார்கள்.

**திருவாவினன்குடி :** இக்கோயில் பழைய கோயில். இது மலைஅடிவாரத்திற்குப் போகும் வழியில் உள்ளது. இதையே நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் பாடியுள்ளார். முனிவர்களும் கந்தர்வர்களும் திருமால், பிரமன், உருத்திரன், என்ற மும்மூர்த்திகளும் இந்திரனும் முப்பத்துமூன்று தேவர்களும், பதினெண் கணங்களும் ஆகாய வழியே வந்து தங்கள் குறைகளை நீக்கிக் கொள்வதற்காகத் தெய்வயானையுடன் திருவாவினன்குடியில் வீற்றிருக்கும் முருகப்பெருமானைத் தரிசிப்பார்கள் என்று நக்கீரர் கூறுகிறார். இந்தத் திருவாவினன்குடிக்குச் சித்தன் வாழ்வு என்ற பெயரும் உண்டு. இதை ஆருதார்த் தலங்களில் ஒன்றான மணிபூரகத் தலமாக ஆன்றோர் கொண்டிருக்கின்றார். இங்கு, மயில் மீதமர்ந்து **குழந்தை வேலாயுதசாமி** காட்சியளிக்கிறார்:

**"ஆதியந்தம் உலா ஆசுபாடியசேரர்**
**கொங்குவைகாவூர் நனுடதில்**
**ஆவினன் குடிவாழ் வானதேவர்கள் பெருமாளே"**

என்று அருணகிரியார் பாடுகிறார்.

இக்கோயிலின் வடகிழக்கேதான் சரவணப் பொய்கை என்ற தீர்த்தம் அமைந்துள்ளது. இதில் நீராடிய பின்னர்தான் எல்லோரும் தரிசனத்திற்குப் போவது வழக்கம்.

பழநித் தலத்தை வழிபடும் முறையைக் கீழ்க்காணும் பாட்டினின்று அறிந்து கொள்ளலாம் :—

" தருமிரவியு தயமது கண்டு வைகாபுரி
தனைக்கண்டு சுத்தி கண்டு
சண்முகப் புனல் கண்டு நியமாதி கண்டுபின்
சரவணப் பொய்கையாடி
அருள் பெருகு மாவினன் குடிகண்டு கைலாசர்
அம்மை பெரியம்மையைக் கண்டு
அம்பொன்மலைகண்டு அதிலிடும்பர் சந்நிதி
அநேக கண் காட்சிகண்டு [கண்டங்கு
கருணை கண் டருள்வள்ளி தெய்வயானையைக்
களிகண்டிருக்கு முன்றன் [கண்டு
கமலபாதங்கண்ட பேரரோருக்காலுமக்
காலனைக் கண்டிடுவரோ
பரிதிவலி கண்டவன் தனைவென்ற தம்பிதன்
பராக்கிரமங் கண்ட துரையே
பழமொறை சொலியசில தொழு மவர்களனுகூல
பழநிமலை வடிவேலனே "

—வடிவேலர் சந்நிதி முறை

பழநிக் கோயில், திருவாவினன் குடிக் கோயில் இவைகளேயன்றி, பெரியநாயகி அம்மை கோயில், சண்முக நதிக்கரையிலுள்ள பிரகதீசுவரர் கோயில் இவைகள் பார்க்கத் தக்கவை.

---

என்னால் ஒன்றும் செய்யமுடியாதென்று உணர்வேன். இறைவா நீ எல்லாம் வல்லவன். உன் பணி செய்ய என்னை ஆளாக்கிக்கொள்.
—மகாத்மா காந்தி.

# கன்னியாகுமரி

நம் நாட்டின் தெற்குக் கோடியில் உள்ளது குமரிமுனை. மிக மிகப் பழங்காலத்தில் அதற்குத் தெற்கிலும் பெரும் நிலப்பரப்பு இருந்து கடல்கொண்டுவிட்டதாக ஆராய்ச்சி அறிஞர்களின் கருத்து. "பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங் கடல் கொள்ள" என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இதே நூலிலும் பின்னர் எழுந்த இலக்கிய இலக்கண நூல்களிலும் தமிழ் நாட்டிற்குத் தெற்கு எல்லையாக குமரி கூறப் பட்டிருக்கிறது. பெரிப்புளுசு (கி. பி. 96) என்ற நூலில் "கொமாரி" ஒரு துறைமுகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தாலமி (கி. பி. 140) என்பவர் எழுதிய பூகோள நூலில் இதை "கொமாரியா" என்று குறிப்பிடுகிறார்.

இத்தலம் மேல்கடல், கீழ்க்கடல், தென் கடல் இவை கூடும் இடத்தில் உள்ளது. இவ்விடத்தில் பரசுராமர் சிவசத்தியாகிய தேவிக்குக் கோயில் எழுப்பிப் பூசித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. இதைச் சுற்றிலுமுள்ள நாஞ்சில் நாடு முறையே பாண்டியர், சோழர், சேரர், நாயக்க மன்னர்கள் இவர்கள் ஆட்சியில் இருந்ததாக வரலாறு கண்ட உண்மை. பாண்டியர்களைக் குமரித் துறைவன், குமரித் தலைவன் என்று சிலப் பதிகாரம், திவாகரம் என்ற நூல்கள் கூறுகின்றன. பராந்தக பாண்டியன் குமரிக்கோட்டத்தைக் கடல் அரிக்காதவாறு தடுத்தான் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. இராஜேந்திர சோழன் கல்வெட்டு ஒன்று கோயிலுக்குத்தானமாகவந்த ஆடுகளைச் சேனைத் தலைவர்களிடம் மகாசபையினர் ஒப்புவித்து அவர்கள் நெய்யாகக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்ததைக் குறிக்கிறது. முதல் குலோத்துங்க சோழன் காலத்தில் கன்னியாகுமரிக் குத்தைப்பூச விழாவிற்கு வருகிற மக்களுக்கு உணவளித்ததை மற்றொரு கல்வெட்டு அறி

---

பழநி, திருவாவினன்குடிப் பகுதிகளைப் பற்றித் திருமுருகாற்றுப் படையிலும், கந்த புராணத்திலும் பழநித் தலபுராணத்திலும், அருணகிரியார் அருளிய 95 திருப்புகழ்ப் பாடல்களிலும் கூறப்பட்டிருக்கிறது. இன்னும் மாம்பழக்கவிச்சிங்க நாவலர் பாடிய பல பிரபந்தங்களும், தண்டபாணி சுவாமிகளது பழநித் திருவாயிரமும், பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் திருவலங்கற்றிரட்டும், அநேக புலவர்கள் தொண்டர்கள் பாடிய பிள்ளைத் தமிழ், கோவை, மாலை, அந்தாதி, வண்ணங்கள், பள்ளு போன்றவை பலவும் இத்திருத் தலத்தைப் பற்றியவையாம்: வசன நூல்களும் இருக்கின்றன. வேண்டுவோர் வேண்டியாங்கியும் பழநி ஆண்டவன் அருள்பெற்று வாழ்வோமாக.

"கண்ணே கண்மணியே கதிக்குரிய ஞானமே
கருணையே கருணைரசமே
கருவினிற் கருவே தொழும்பனேனிதய வொண்
கமலமே கமல மணமே
விண்ணே விணுெளியேநல் வேத வேதாந்தமே
மேதக வெறுக்கையரசே
வித்தாரமான புவனப் பரப்பெங்கணும்
வியாபித்து நிற்கு நிறைவே
தண்ணேறு நின்னடியை நண்ணுத பாவிபொய்
சாலவுஞ் சொற்ற பாவி
தக்கோரிடத் துறவு பண்ணுத பாவிவெகு
தவறுகளிழைத்த பாவி
உண்ணேரிலாத படுபாவி நானுன்னருளுருதுய்ய விடனு முண்டோ
உலகனைத்தும் புகழ்த்திருப் பழநிமலைமேவு
மோங்கார குரு நாதனே"

—பாம்பன் சுவாமிகள்

விக்கிறது. பூதலஸ்ரீ வீர உதயமார்த்தாண்ட வர்மா (கி. பி. 1516—1535) என்ற சேர மன்னர் கோயிலுக்கு நிவந்தங்கள் ஏற்படுத்தியதை இன்னுமோர் கல்வெட்டு தெரிவிக்கிறது. இவற்றால் பாண்டியர், சோழர், சேரர், நாயக்க மன்னர்கள் குமரியம்மையைக் குல தெய்வமாகக் கருதி வழிபட்டனர் என்று பெறப்படுகிறது.

தேவியின் கோயில் கடல் ஓரத்தில் முக்கடல் சந்திப்பின் அருகேயுள்ளது. அம்பிகையின் திருவுருவத் திருக்கோலத்தைக் கண்ட கண்களே கண்பெற்ற பயனைப் பெற்றதாகச் சொல்லலாம். குமரியம்மை கன்னிகையாகவே இருப்பதற்கு வரலாறுகள் உண்டு. தேவி சிவபெருமானைத் திருமணம் செய்துகொள்ள விரும்பியதாகவும் அது நடைபெறாமற் போகவே கன்னிகையாகக் காலங் கழிக்கிறாள் என்பதொன்று. பன்னிரண்டு பிரளயகாலம் கன்னிகையாகவே தவமிருந்து பின்னர் இறைவனைத் திருமணம் செய்து கொள்வாள் என்பது மற்றொரு கதை. தேசிய கவி பாரதியாரும் "நீலத்திரைக்கடல் ஓரத்திலே நித்தம் தவம் செய் குமரி" என்று அழகுபடக் கூறியுள்ளார்.

இங்குள்ள கடற்கரைத் தீர்த்தத்தை அலைவாய்த் தீர்த்தம், சங்கிலி தீர்த்தம் என்றும் சொல்வர். மூன்று கடல்களின் அலைகள் மோதுகின்ற இவ்விடத்தில் நீராடுதல் மிக்க இன்பம் அளிக்கிறது. மாங்காட்டு மறையவன் மாடலன் என்பவன் குமரியம் பெருந்துறையில் நீராடி வந்ததாகச் சொல்கிறது சிலப்பதிகாரம். காசியிலிருந்த அபஞ்சிகன் என்னும் அந்தணன் மனைவி சாலியென்பாள் அவனுக்குச் செய்த அபசாரத்தைத் தொலைப்பதற்காகக் குமரிநீராடி பாவத்தைப் போக்கிக் கொண்டாள் என்று மணிமேகலை கூறுகிறது. இன்னும் சுசீந்திரத்தில் எழுந்தருளியுள்ள தாணுமாலய சுவாமியின் அபிஷேக நீர் பூமிக்குள்ளாக ஓடிக் கன்னியாகுமரியில் கடலில் விழுகிறது என்ற ஒரு ஐதீகம் உண்டு. கன்னியா குமரியிலுள்ள தாணுதீர்த்தம் இந்த இடத்தைக் குறிக்கும் என்பர்.

இயற்கையன்னையின் எழிலைக் காண வேண்டுமெனில் அவசியம் குமரிக்குச் செல்ல வேண்டும். மதி நிறைந்த நன்னாளிலே சூரியன் மறைகிற, சந்திரன் உதயமாகிற மாலைக் காலத்திலே கடலருகே நின்று பார்த்தால் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். கன்னியாகுமரி உடல்நலத்துக்கும் உகந்த ஓர் இடம். இங்குதான் கடலிலுள்ள ஒரு பாறை மீது சுவாமி விவேகாநந்தர் அமர்ந்து கடுந்தவமிருந்து பின்னர் இராமநாதபுர மன்னர் பாஸ்கர சேதுபதியவர்களின் உதவியால் அமெரிக்க நாட்டிற்குச் சென்று இந்து மதத்தின் உயர்வைப் பரப்பினார். குமரிதேவியின் மூக்கணி இரவில் கடலில் செல்லும் கப்பல் மாலுமிகளைக் கலங்கரை விளக்கம் என்று எண்ணும்படி செய்துவிட்டதென்றும் சொல்வர். அம்மூக்கணியின் வைரமணி அவ்வளவு ஒளியுள்ளதாக இருந்தது போலும். இக்கோயில் கேரள நாட்டின் ஆட்சியில் இருந்து இப்போது சென்னைமாநில அறநிலைய ஆணையாளரின் நேர்மேற்பார்வையில் இருக்கிறது. குமரி நீராடி, அம்பிகையை வணங்கி அவள் திருவருளைப் பெற முயல்வோமாக.

---

நம்பினவர்களுக்கே ஆண்டவனுளன், பல கொடுமைகள் நடப்பதால் அவன் இல்லாமற் போய்விடமாட்டான். அவன் அவ்வளவையும் சகிக்கும் ஆற்றலுடையவனெனினும் தண்டிப்பதில் கொடியனுமாவான்.

ஆண்டவனுக்கென அவயவங்களில்லை. அவன் ஒருவனே யானாலும் அடியவர்கள் கோரிய வண்ணம் காட்சி அளிப்பான்.

என் கண்ணைப் பிடுங்கினும் நான் வாழ்வேன் : மூக்கைத் தகர்த்தெறிந்தாலும் நான் வாழ்வேன் ; காற்று, தண்ணீரின்றியும் வாழ்வேன். கடவுள் நம்பிக்கை யற்று மட்டும் ஒரு கணமேனும் என்னால் வாழ முடியாது.

ஒருகணமேனும் கடவுளால் நான் புறக்கணிக்கப்படவில்லை யென்பதை யுணர்வேன். அவனுடைய இமையா விழிகள் என் செயல்களைக் கண்காணித்துக்கொண்டே யிருக்கின்றன.

—மகாத்மா காந்தி.

# திருஞான சம்பந்தர்

வேதநெறி தழைத்தோங்கமிகு
சைவத்துறை விளங்கப்
பூதபரம்பரை பொலியப்
புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித்
திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு
திருத்தொண்டு பரவுமாம்.

பொன்னி நாடெனப் போற்றப்படும் சோழவள நாட்டிலுள்ளது சீகாழி. பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், சிரபுரம், தோணிபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்ற பன்னிரண்டு திருப்பெயர்கள் அப்பதிக்குண்டு. அங்கு அந்தணர் குடி முதல்வரான சிவபாத இருதயர் என்பவர் வதிந்தார். அவர் சிவநெறி வழாத சிந்தையர். அவருடைய திருமனையார் கற்பினிற் சிறந்த பொற்புடைய பகவதியார். இருவரும் இல்லறத்தில் இன்பமுற மகப்பேற்றை விரும்பினர். திருத்தோணியப்பரின் சேவடி வழிபட்டுத் தவம் கிடந்தனர். திருவாதிரைநாளிலே, பரசமயத்தருக் கொழியவும், சைவம் தழைத்தோங்கவும், தொண்டர் மனம் களிசிறக்கவும், திருநீற்று ஒளி எண்திசையும் விளங்கவும், தமிழ் செய்த தவம் நிரம்பவும் பகவதியார் மணிவயிற்றில் ஒரு திருமகவு பிறந்தது. சேக்கிழார் சுவாமிகள்,

அவம்பெருக்கும் புல்லறிவி
னமணமுதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள்
பாழ்பட நல்லூழிதொறும்
தவம்பெருக்கும் சண்பையிலே
தாவிற் சராசரங் களெல்லாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார்
திருவவதாரம் செய்தார்.

என்று கூறுகிறார்.

குழந்தை வளர்ந்து மூன்று வயதை அடைந்தது. தந்தையார் நீராடச் சென்ற ஒரு நாள் உடன் அழைத்துச் சென்றார். கோயிலிலுள்ள திருக்குளத்தில் மூழ்கி அகமருடண சபம் செய்துகொண்டிருந்தார். தந்தையாரைக் காணாத தனயர் 'அம்மே, அப்பா' என்றழுதது. அவ்வழுகை திருத்தோணியப்பரின் திருச்செவிகளுக்கு எட்டியது. பார்வதி தேவியுடன் அக்குளக்கரை பக்கம் எழுந்தருளி, அம்மையாரைக் குழந்தைக்குப் பால் கொடுக்கப்பணித்தார். அவ்வாறே தேவியாரும் சிவஞானப்பாலைப் பொற்கிண்ணத் தளித்துக் குழந்தையின் அழுகையைத் தீர்த்தார். அவ்வளவில்,

சிவனடியே சிந்திக்கும்
திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும்
பாங்கினிலோங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம்
உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்
தாமுணர்ந்தா ரந்நிலையில்.

திருக்குளத்தினின்றும் கரையேறிய தந்தையார், குழந்தையைப் பார்த்து "யார் கொடுத்த பாலை நீ உண்டாய்" என்று சினந்து ஒரு கோலினைக் கொண்டு ஓங்க, பிள்ளையாரும் ஆனந்தக் கண்ணீர் பெருக, விண்ணிலே விடையில் தேவியாருடன் வீற்றிருந்த பெருமானைத் திருவிரலால் காட்டி, 'தோடுடைய செவியன்" என்ற தொடக்கத்த பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளினார். இந்நிகழ்ச்சியைக் கண்ட சிவபாத விருதயர் திருவருட்டிறத்தினை நினைந்து வியந்தனர். சம்பந்தர் திருக்கோயிலினுள்ளே புகத் தானும் பின்தொடர்ந்தார். ஊர் முழுவதும் இச்செய்தி யெட்ட, குழந்தையைக் கோபுரவாயிலில் எல்லோரும் எதிர்கொண்டு வணங்கி வாழ்த்தினர்,

மறுநாட் காலை, ஆளுடைய பிள்ளையார் திருத்தோணியப்பரை வணங்கி, அண்மையி லுள்ள திருக்கோலக்காவிற்குச் சென்று "மடையில் வாளை" என்ற திருப்பதிகம் விண்ணப்பித்தார். இறைவன் திருவருளால் ஐந்தெழுத்து எழுதப்பெற்ற செம்பொற்றாளங் கள் அவர் கைகளில் வந்தடைந்தன. அங் கிருந்து திரும்புங்காலை தந்தையார் குழந்தை யைத் தோளில் தாங்கிச் சென்றனர். தம் தாயார் பிறப்பிடமாகிய திருநனிபள்ளிக்குச் சென்று திருப்பதிகம் பாடினர். பின்னர் சில தலங்களுக்குச் சென்று வணங்கிப் பதிகங்கள் பாடி சீகாழிக்கு மீண்டனர். திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியார் மதங்க சூளாமணியாரும் வந்து சம்பந்தரை வணங்கி அவர் பாடும் பதிகங்களை அவருடன் பிரியா திருந்து யாழிலிட்டு வாசிக்கப்பெறும் பேற் றினை வேண்ட, பிள்ளையாரும் இசைந்தனர். காழிவள்ளல், தில்லைநாதனின் எல்லையில் லாத் தனிப்பெருங் கூத்தைக் காணத் திரு வுளங் கொண்டார். புறப்பட்டு வழியி லுள்ள தலங்களை வணங்கிவிட்டுச் சிதம் பரம் வந்தடைந்தார். பதிகம் பாடினார். இறைவனின் ஆனந்த தாண்டவத்தைக் கண்டு பேரானந்தம் கொண்டார். பின்னர் பல திருப்பதிகளை வழிபட்டுப் பதிகங்கள்பாடி திருநெல்வாயில் அரத்துறை என்னும் தலத் திற்கு எழுந்தருளினார். தந்தையின் தோள் மேல் இருப்பதைத் தவிர்த்து நடந்து சென்ற னர். பாததாமரைகள் நொந்தன. மாறன் பாடியில் தங்கினர். திருவரத்துறை ஈசன், அப்பதியிலுள்ள அந்தணர் கனவில் தோன்றி "ஞானசம்பந்தன் நம்பால் வருகின்றான். அவ னுக்கு நம்மிடமுள்ள முத்துச்சிவிகை, மணிக் குடை, ஊது சின்னங்கள் இவைகளைக் கொண்டுபோய்க் கொடுமின்" என்று ஆணை யிட்டார். மறுநாட் காலையில் கோயில் திருக் காப்பு நீக்கி, அவை ஆங்கு இருப்பக் கண்டு வியப்படைந்து, அவைகளை எடுத்துக் கொண்டு புகலியர்கோனை எதிர்கொளச் சென் றார்கள். ஆளுடைய பிள்ளையாரும் சிவிகை மீது ஏறித்திருவரத்துறைவந்து ஈசனை வணங் கிப் பதிகம் பாடினர். பின்னர் பல திருப்பதி களைப் பணிந்து பாமாலை சூடி சீகாழிக்குத் திரும்பினார்.

அந்தணர்குல முறைப்படி கவுணியர் பெருமானுக்கு உபநயனம் செய்வித்தார்கள். அவ்வமயம், "அந்தியுள் மந்திரம் அஞ்செழுத் துமே" என்பதை வற்புறுத்திப் பஞ்சாக்கரப் பதிகம் பாடினார். திருநாவுக்கரசர் சம்பந்த ரைக் காண்பதற்குக் கழுமலம் வந்தார். ஞான போனகரும் அவரை எதிர்கொண்டழைத்துச் சென்று திருத்தோணியப்பரை வணங்கிப் பின் திருமாளிகையில் அமுது செய்வித்தார். சிலநாட் பின்னர் அப்பர் பிரியாவிடை பெற் றுச் சென்றார்.

புகலி வேந்தர் புறப்பட்டுப் பல திருப்பதி களை வழிபட்டு மழநாட்டிலுள்ள திருபாச்சி லாச்சிரமத்தை யடைந்தார். அவ்வூரில் கொல்லிமழவன் மகள் முயலகன் என்னும் நோயால் வருந்துவது தெரிந்து, திருக்கோயி லுக்குச் சென்று அங்கு உணர்விழந்து கிடக் கும் அப்பெண்ணைக் கண்டு கழிபேரிரக்கம் கொண்டு "மணிவளர் கண்டரோ மங்கையை வாடமயல் செய்வதோ இவர் மாண்பே" என்ற முடிவுடைய பதிகம் பாடினார். அப் பெண்மணி நோய் நீங்கினாள். பின்னர் கொங்கு நாட்டுத் தலங்களை வழிபட்டு சம்பந் தர் திருக்கொடிமாடச் செங்குன்றூரில் (திருச் செங்கோடு) தங்கினார். பனி மிகுதியால் அடி யார்களுக்கு நளிர்சுரம் கண்டது, "அவ் வினைக் கிவ்வினையா மென்று" என்று தொடங்கும் திருநீலகண்டப்பதிகம் பாடியரு ளினார் காழிவேந்தர். அவ்வளவில் அடியார் களுக்கேயன்றி அந்நாட்டிலுள்ளார் அனை வரையும் பனிப்பிணி விட்டகன்றது.

அந்நாட்டை விட்டுப் புறப்பட்டுக் காவிரி யின் தென்கரையிலுள்ள பல தலங்களையும் வணங்கிப் பதிகம் பாடினர். திருவலஞ்சுழியிற் றங்கியபோது முதுவேனிற்காலம் வந்தது. திருப்பட்டீச்சரத்துக்கு ஆளுடைய பிள்ளை யார் எழுந்தருளும்போது இறைவன் திருவரு ளால் முத்துப்பந்தர் கிடைத்தது. அதன் நிழற் கீழ்ச்சென்று பட்டீச்சரநாதரைப் பணிந் தார். மற்றும் பல பதிகளை வணங்கித் திருச்

---

என்னுடைய ஆற்றல் முழுவதும் ஆண்டவன் அருளினால் ஏற்பட்டதே. ஆனால் அவன் நேர் முகமாக வழங்குவதில்லை. பல துறைகளில் நமக்கு வேண்டுவன அளித்துக்கொண்டு வருகிறான்.

—மகாத்மா காந்தி

செங்காட்டங்குடி சென்று சிறுத்தொண்டர் மனையில் தங்கினார். திருமருகலுக்கு எழுந்தருளினார். அங்கு, வணிகன் ஒருவன் உடன் அழைத்துவந்த கன்னிகையோடு தங்கியிருப்ப இரவு அரவுகடித் திறந்தான். அது செய்தி யறிந்த, பிள்ளைப் பெருமானார் "சடையா யெனுமால்" என்ற பாட்டில் "மருகல் உடையாய் தருமோ இவள் உண்மெலிவே" என்று அப்பெண்ணின் நிலைமைக்கு இரங்கிப் பாட வணிகன் உயிர் பெற்றெழுந்தான். இருவருக்கும் மணவாழ்க்கை அருளிவிட்டுச் சண்பையர்கோன் திருப்புகலூர் வந்தடைந்தார். வாகீசரும் அங்கு வந்து திருவாரூர்ப் பெருமை கூற சம்பந்தர் அப்பதிக்குச் செல்லத் திருவுளங் கொண்டெழுந்தருளினர். மீண்டும் திருப்புகலூர் வர, அவரும் அப்பருமாக பல தலங்களைத் தரிசித்துத் திருவீழிமிழலை யடைந்தனர். அங்கு மழை சுருங்கிய காரணத்தால் விளைவு குறைந்து மக்கள் பசியினால் வாடினர். இறைவன் திருவருளால் இருவரும் படிக்காசு பெற்றுப் பஞ்சத்தைப் போக்கினர்.

பின்னர் இருவருமாக பல தலங்களை வணங்கித் திருமறைக்காட்டை அடைந்தனர். அக்கோயிலில் எம்பெருமானுக்கு நேரேயுள்ள கதவுக்கள் சாத்தப்பட்டிருந்தன. அப்பர் சுவாமிகள் பாட அக்கதவுகள் திறந்தன. இருவரும் அவ்வாயில் வழியே போய் ஈசனைத் தொழுதனர். புறம் போந்து சம்பந்தர் அக்கதவுகள் அடைக்கப் பாடினர்.

பாண்டி நாட்டிலே அரசன் சமண சமயத்தை மேற்கொண்டான். மக்களும் அச்சமயத்தைக் கடைப்பிடித்தனர். சிவநெறி குன்றிவிட்டது. பாண்டிமாதேவியாரும் அமைச்சர் குலச்சிறையாருமே சைவ சமயத்தில் நின்று அதைப் பாதுகாத்தனர். திருமறைக் காட்டில் தங்கியிருந்த ஞானக் குழந்தையின் பெருமையைக் கேள்வியுற்றுத் தங்கள் நாட்டிற்கு அவர் வரவேண்டுமென்று ஏவலரை விடுத்தனர். ஏவலர் வந்து கேட்டுக்கொண்டதற்கிணங்க சம்பந்தரும் புறப்படத் திருவுளங் கொண்டார். கோள்கள் தீயனவாக இருந்தபடியால் அப்பர் அதற்கு உடன்படவில்லை. இறைவன் அடியவர்க்குத் தீங்கொன்றும் வாராதென்று கூறி "வேயுறு தோளி பங்கன்...என்று தொடங்கும் பதிகம் பாடினர். வாக்கின் மன்னவரும் இசைய சம்பந்தர் பாண்டி நாட்டிற்குச் சென்றனர். மதுரையை அண்மினார்.

பாண்டி மாதேவியார் பணித்ததற்கிணங்க குலச்சிறையாரும் சம்பந்தரை வரவேற்றார். ஆலவாய்க் கோயிலில் மங்கையர்க்கரசியாரையும் சந்தித்தார். இறைவழிபாட்டின் பின் அமைச்சர் காட்டிய திருமடத்தில் தங்கினர். சமணர்கள் அந்த மடத்திற்குத் தீயிட்டனர். "செய்யனே திருவாலவாய் மேவிய..." என்று தொடங்கி "அமணர் இட்டதீ, பையவே சென்று பாண்டியற்காகவே" என்று சம்பந்தர் பாடினர். பாண்டியனுக்கு வெப்பு நோய் வந்து வருந்தினான். அரசியார் வேண்டுகோளின்படி சம்பந்தரை அழைக்க இணங்கினான். குலச்சிறையாரும், மங்கையர்க்கரசியாரும் திருமடத்திற்குச் சென்று

"ஞானத்தின் திருவுருவை
நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்
வளர்மதிக் கொழுந்தைத்
தேனக்கமலர்க் கொன்றைச்
செஞ்சடையார்சீர் தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக்
கண்களிப்பக் கண்டார்கள்."

அவர்கள் வேண்டுகோட்படி அரண்மனை வந்து அரசனின் வெப்பு நோய் தீர்க்கத் திருவுளங் கொண்டனர். சமணர்கள் அரசன் உடலின் இடது பாகத்தில் நோயைத் தீர்ப்பதாகக் கூறி, மயிற்பீலி கொண்டு தடவினர். வெப்பம் மிகுந்ததேயன்றிக் குறையவில்லை. சம்பந்தர் திருநீற்றுப்பதிகம் பாடி அரசன் உடலின் வலது பக்கத்தில் திருநீறு பூசினர். அப்பக்கம் வெப்பம் தணிந்து மறுபக்கம் சேர்ந்து இருமடங்காக ஓங்கியது. அரசன்

---

எல்லா ஆதரவுகளும் அற்றுப்போய்விட்டன என்ற நிலையிலும் ஆதரவளிக்க ஏதோ ஒரு வாய்ப்பு எங்கிருந்தோ கிடைக்கிறது. சாப்பிடுவதாலும் பருகுவதாலும் அயர்வு தீர்வதுபோல் பிரார்த்தனையும் அயர்வைப் போக்குகிறது. இது சொந்த அனுபவம். முக்காலும் உண்மை.

—மகாத்மா காந்தி.

தாங்கொணுத் துயருற்றுன். அப்பக்கத்திலும் சம்பந்தர் திருநீறு பூசி அரசன் நோயைத் தணிவித்தனர். தோல்வியுற்ற சமணர்கள் அனல்வாதம் செய்யவேண்டு மென்றனர். அவர்கள் தீயிலிட்ட ஏடு எறிந்து சாம்பலா யிற்று. சம்பந்தர், 'போகமார்த்த' என்று தொடங்கும் திருநள்ளாற்றுப் பதிகத்தை எழுதிய ஏட்டைத் தீயிலிட அது வெந்து போகாமல் பச்சையாக இருந்தது. மூன்றும் சோதனையாகப் புனல்வாதம் செய்ய வேண்டுமென்றனர் மனம் புழுங்கிய அமணர். "அதில் தோற்றுல் வேந்தனே எங்களைக் கழுவேற்றுவானுக" என்றனர். 'அஸ்தி நாஸ்தி' என்று அவர்கள் எழுதிய ஏட்டை வையையாற்றில் இட்டனர். தண்ணீரில் அடித்துக்கொண்டு கடல் நோக்கிப் போய்விட்டது. காழிப்பிரான், 'வாழ்க அந்தணர்' என்று தொடங்கும் பதிகம் எழுதிய திருவேட்டை ஆற்றுநீரிலிட்டனர். ஆற்றிலே அது எதிர்நோக்கிச் சென்றது. திருவேடகம் என்னுமிடத்தில் குலச்சிறையாரால் எடுத்துவரப்பட்டது. அரசனும் அமணரைக் கழுவிலேற்றி முறை செய்க என்று அமைச்சருக்கு ஆணையிட்டனன். அரசனும் குடிகளும் சமண சமயம்விட்டுச் சைவத் திருநெறியைக் கடைப்பிடித்தனர்.

சிவபாத இருதயர் தம் அருந்திருக் குழந்தையைக் காண மதுரை வந்தார். காழி வேந்தரும் புறப்பட்டுப் பிறதலங்களை வணங்கி முள்ளிவாய்க்கரை வந்தார். திருக்கொள்ளம் பூதூருக்குச் செல்ல ஆற்றில் வெள்ளமாக இருந்தது; ஓடமில்லை. 'கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்' என்று தொடங்கும் பதிகம்பாட ஆறு வழிவிட்டது. திருப்போதிமங்கையில் பௌத்தர்கள் சம்பந்தரை மொழி வாதத்திற் கழைத்தனர். அவரும் இசைந்தனர். சொற்போரில் சாக்கியர் தோற்றனர். பின்னர் சைவசமயத்தை மேற்கொண்டனர்.

சண்பைவேந்தர் இன்னும் பிற திருப்பதிகளை வணங்கி, அப்பமூர்த்திகள் தங்கியிருந்த திருப்பூந்துருத்தியடையப் புறப்பட்டார். பூந்துருத்திக்கருகே சம்பந்தர் பல்லக்கில் வருவதறிந்த சொல்வேந்தர் யாரும் அறியாதபடி திருக்கூட்டத்தில் நுழைந்து சிவிகையைத் தாங்கி வந்தார். சம்பந்தர் 'அப்பர் எங்குற்றுர்' என, 'அடியேன் நுமது சிவிகை தாங்கும்பேறு பெற்றேன்' என்ருர் அப்பர். ஞானவள்ளல் உடனே கீழிறங்கி ஒருவரையொருவர் வணங்கினர். பின்னர் வாகீசர் ஆலவாய் சென்ருர். சம்பந்தர் இன்னும் சில பதிகளை வணங்கி சீகாழி வந்து சேர்ந்தார்.

கவுணியர் பெருமான் தொண்டை நாட்டிலுள்ள தலங்களை வணங்க எண்ணித் தில்லை மூதூர் வந்து வழிபட்டார். அதன் பிறகு சில தலங்களை வணங்கிவிட்டுத் திருவோத்தூருக்குச் சென்று, "குரும்பை ஆண்பனையின்குலே" என்று தொடங்கும பதிகம் பாடி ஆண் பனைகளெல்லாம் பெண்பனைகளாகும்படியான அற்புதத்தைச் செய்தார். பிறகு பல பதிகளை வழிபட்டுத் திருவொற்றியூர் வந்தடைந்தார்.

திருமயிலாப்பூரில் சிவநேசர் என்ற வணிகர் பெருமகன் இருந்தார். பூம்பாவை என்ற தன் பெண்ணைப் புகலியர்கோனுக்கு மணம் செய்விக்க முடிவு செய்திருந்தனர். ஆனுல் பூக்கொய்யச் சென்ற அப்பெண்ணை அரவுகடிக்க இறந்தாள். பூம்பாவையின் உடலை எரித்துச் சாம்பலையும் எலும்பையும் குடத்தில்சேர்த்துக் கன்னிமாடத்தில் திருஞானசம்பந்தர் வரும் வரையிற் பாதுகாத்து வைத்திருந்தார். காழிப்பிரான் திருவொற்றியூர் அடைந்த செய்தியறிந்து அங்குச் சென்ருர் ஆளுடைய பிள்ளையாரும் மயிலாப்பூரை நோக்கி அடியார் குழாத்துடன் வந்தார். சிவநேசர் வணங்க, இருவரும் கபாலீச்சரமடைந்தனர். எலும்புக்குடம் திருக்கோயில்முன் கொண்டுவந்து வைக்கப் பட்டது.

"மட்டிட்ட புன்னையங்கானன்........" என்ற பதிகத்தைப் பாடினுர். குடம் உடைந்து பூம்பாவை வெளிப்பட்டனள். அவர் சிவபெருமான் திருவருளால் தாம் மீட்டும் பிறப்பித்தபடியால் அப்பெண்ணைத் திருமணம் புரிதல் தக்கதன்று என்று மறுத்தனர். பின்னர் பல பதிகளையும் வணங்கிச் சீகாழிக்குத் திரும்பினர்.

---

தூய காரியங்களைச் சாதிப்பதில் தடைகளைப் பொருட்படுத்தாதே. ஆண்டவன் துணை புரிவான் என்பதில் நம்பிக்கை கொள். என்னையும் ஆதரிப்பாரு என்ற அவநம்பிக்கை வேண்டாம்

—மகாத்மா காந்தி.

சம்பந்த பெருமானுக்கு, நம்பியாண்டார் நம்பி யென்பவரின் பெண்ணைத் திருமணம் செய்ய முடிவு செய்தனர். எல்லோரும் மணப் பெண் ஊருக்குப் புறப்பட்டனர். மங்கல மடந்தையார் பொற்குடமும் மணிவிளக்கும் எடுத்துக் காழிவேந்தரை எதிர்கொண்டனர். மணப்பந்தரில் மணமகனும் மணமகளைக் கைப்பற்றித் தீவலம் வந்தனர். உலக பாச மான இல்லறக்கட்டு வந்ததை யெண்ணி மனங்கவன்று திருக்கோயிலை நோக்கிப் புறப் பட்டார். யாவரும் பின்சென்றார்கள். சிவபெரு மான் திருவருளால் எழுந்த ஒரு பெருஞ் சோதி தோன்றிற்று. புகலியர் பெருமான் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யோதி யாவ ரையும் அதில் புகும்படி சொன்னார். எல்லோ ரும் புகுந்தபின் தன் காதலியைக் கைப்பற் றிக்கொண்டு சம்பந்தரும் சோதியுட் புகுந்து இறைவனுடன் இரண்டறக் கலந்தனர்.

திருஞான சம்பந்தர் காலத்தில் அப்பர் பெருமான் இருந்தார். காஞ்சியில் அரசாண்ட மன்னன் பல்லவ மன்னன் நரசிம்மவர்மன். அவன் படைத்தலைவராக இருந்த சிறுத் தொண்டர்தான் சாளுக்கியமன்னன் இரண் டாம் புலிகேசியின் வாதாபி நகரத்தை யழித் தார். ஆதலின் சம்பந்தர் காலம் ஏழாம் நூற் றாண்டின் முற்பகுதியென்று ஆராய்ச்சி யறி ஞர்கள் கண்ட முடிவு.

இயற்கை ஒரு போர்வை. அதன் உள் ளுறை கடவுள். இந்த தத்துவத்தை சம்பந்தர் தேவாரத்தில் பரக்கக் காணலாம். இயற்கைக் காட்சிகளை வருணிப்பதில் அவர் தலை சிறந்த வர். அதிலும், அந்தந்த ஊர்களில் இன்றும் காணக்கூடிய காட்சிகளை அவர் நம் கண் முன்னே நிறுத்திவைத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது.

"மலையார்சாரல் மகவுடன்வந்த மடமந்தி
குலையார்வாழைத் தீங்கனிமாந்தும் குற்றாலம்"

"கூதன் மாரிநுண் துனி தூங்கும் குற் றாலம்."

மேலும் அந்தந்த நாட்டிலுள்ள சொற் களைப் பயன்படுத்தியிருப்பது இன்புறத்தக் கது சாரல்காற்றைக் கூதல் என்று திருநெல் வேலிச் சீமையில் சொல்வர். அதையே கூதன் மாரி...குற்றாலம் என்றார். பாண்டிய நாட்டுச் சொல்லான மெல்ல என்று பொருள் படும் பைய என்பதைப் "பையவே சென்று பாண்டியற் காகவே" என்று கூறியிருக்கிறார். கடவுளைத் தலைவனாகவும் தம்மைத் தலைவி யாகவும் வைத்துப் பாடிய அகத்துறைப் பாடல்களும் உள்ளன. இறைவனுடைய திரு மூர்த்தத்தையும், குணங்களையும் சொல்லும் தத்துவப்பகுதிகளும் பல விடங்களில் அவர் பாடல்களில் காணலாம். சைவ சித்தாந்தக் கருத்துக்கள் செறிந்த பாடல்களும் பல உள. ஒவ்வொரு பதிகத்திலும் முதல் ஏழு பாடல் கள் ஏழு லோகத்தையும், 8,9,10-ஆவது பாடல்களில் முறையே இராவணன், அரி அயன், சமணர் இவர்களைப் பாடியிருப்பது ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங் களைக் குறிக்கும் என்றும் ஆன்றோர் கூறி யிருக்கின்றனர். இன்னும் அவர் காலத்திருந்த அடியவர்களைப் பதிகங்களில் வைத்துப் பாடி யிருப்பது அவருடைய பெருங்கருணையையும் பேரன்பையும் காட்டுகிறது. திருச்செங்காட் டங்குடியில் சிறுத்தொண்டரையும், திருச் சாத்தமங்கையில் திருநீலநக்கரையும், திருப் புகலூரில் திருமுருக நாயனாரையும் பதிகங் களில் புகழ்ந்து பாடியிருக்கிறார். திருவால வாய்ப் பதிகத்தில் மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் ஒன்றைவிட்டொன்றாகப் பத்துப்பாட்டுக்களில் சொல்லி, 11-ஆவது பாட்டில் இருவரையும் சேர்த்துப் புகழ்ந்திருப் பது போற்றியின்புறத்தக்கது.

போதையார் பொற்கிண்ணத்
தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத்
தானெனை யாண்டவன்
காதையார் குழையினன்
கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும்
பெருந்தகை யிருந்ததே.

# நம்மாழ்வார்

தென்பாண்டி நாட்டில் கடம்பூர் கால் வாய்க்கும், தாமிரபர்ணி நதிக்கும் இடையில் திருக்குருகூர்பதி அமைந்துள்ளது. அப்பதி யில் கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றுவது நாள் (கி. மு. 3102) பிரமாதி வருடம் வைகாசித் திங்கள் வெள்ளிக்கிழமை முழு மதியோடு கூடிய விசாக நட்சத்திரத்தன்று, காரியார் என்ற சிற்றரசருக்கும், உடைய நங்கையார் என்ற மாதர் திலகத்திற்கும் திருக்குமாரராய் நம்மாழ்வார் தோன்றினர். ஆராய்ச்சியாளர் கள், நம்மாழ்வார் காலத்தைப்பற்றி ஒரு முக மான முடிவுக்கு இன்னும் வரவில்லை. இது காறும் செய்த ஆராய்ச்சிகளை நோக்கு மிடத்து, நம்மாழ்வார் நான்காம் நூற்றுண் டிற்கும் எட்டாம் நூற்றுண்டிற்கும் இடைப் பட்ட காலத்தினராக இருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

சடகோபர் என்ற பிள்ளைத்திருநாமம் பெற்ற இவர், மற்ற குழந்தைகளைப் போன்று பாலுண்ணல், அழுதல் முதலிய செயல்க ளின்றிக் கண்மூடி மௌனியாக இருந்தார். இதுகண்டு வியப்புற்ற பெற்ருேர் சிலநாள் சென்றபின் தம் குழந்தையுடன் அவ்வூரி லுள்ள ஆதிநாதர் திருக்கோயிலுக்குச் சென் றனர். சடகோபர், மெல்லத் தவழ்ந்துசென்று பிரகாரத்திலிருந்த திருப்புளியின் (புளிய மரம்) அடியில் அமர்ந்தார். உணவும் நீரும் இன்றி இருந்தும், குழந்தையின் உடல் வளர்ச்சி குன்றவில்லை. இவ்வாறு இருக்கும்போது, வடதிசையினின்றும் தெற்குநோக்கி வரும் திருக்கோளூர் யோகி மதுரகவிக்கு ஓர் இர வில் தென்திசையின்கண் அதிசயப் பேரொளி தென்பட்டது. அவ்வொளியை இரவில் பார்த்துக்கொண்டே திருக்குருகூர் வந்தடைந்து, திருப்புளியின் கீழிருந்த நம் மாழ்வாரைக் கண்டார். மதுரகவி தன் வினைக் களுக்கு அளித்த பதில்களைக் கேட்டு, நம் மாழ்வாரை மஹாஞானி என்றறிந்து தம் முடைய குருவாகக் கொண்டார். நம்மாழ் வார், காலக்கிரமத்தில் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந் தாதி என்ற திவ்வியப் பிரபந்தங்களை அரு ளிச் செய்தார். மதுரகவியாழ்வார் அவற் றைப் பட்டோலை செய்து கொண்டார். மற் றைய ஆழ்வார்களால் பாடப் பெருத மலை நாட்டுத் திருப்பதிகள் இவரால் பாடப்பட் டன. மதுரகவி தம் ஆசிரியர் நம்மாழ்வாருக்கு உருவம் அமைத்து, கோயில்கட்டித் திருவிழா முதலியன நடைபெற ஏற்பாடு செய்தார். நம் மாழ்வார் மற்ற ஆழ்வார்களுக்குத் தலைவராக விளங்குகிருர். இவருக்குக் கரிமாறன், வகுளா பரணன், திருக்குருகைப்பெருமாள், பராங்கு சன் திருநாவீறன், விசாகப்பெருமாள், பிள் ளைப் பெருமாள் முதலிய பெயர்களுண்டு.

நம்மாழ்வார் நம் எல்லோருக்குமே சொந்தமானவர். ஆதலின் நம் ஆழ்வார் என்று பெயர் பெற்ருர். திருக்குருகூரில் ஆழ் வார் பிறந்த காரணத்தால் அவ்வூர் ஆழ்வார் திருநகரி என வழங்கலாயிற்று. மதுரகவி ஆழ்வார் என்பவர் கடவுளைப் பாடாது, அவர் அடியாருள் தலைசிறந்தவரும், 'வேதத்தமிழ் செய்த வித்தகர்' என்று பாராட்டப்பெற்ற நம்மாழ்வாரைப் பாடியதிலிருந்து இவருடைய சிறப்பினை அறியலாம். மதுரகவி "வேதம் பகர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை ஓதும் சடகோபன் ஊர்" என்று நம்மாழ்வார் பிறந்த பதியைச் சிறப்பித்துள்ளார்.

தமிழ் நாட்டில் தோன்றிய நம்மாழ்வார் உலகு உய்யத் தோன்றிய குருமூர்த்திகளுள்

---

பிரார்த்தனைக்குப் பேச்சு வேண்டுவதில்லை. சிந்தனையே போதுமானது. சிந்தனையிலெழும் தீய எண்ணங்களைப் போக்க பிரார்த்தனை சிறந்த முறையாகும். ஆனல் பிரார்த்தனைக்குப் பணிவு மிகவும் அவசியமானது.

—மகாத்மா காந்தி.

ஒருவர். இயல்பால் மெய்யுணர்வு பெற்று, எல்லாவற்றிற்கும் அடிப்படையான வித்தினை உணர்ந்தார். உணர்ந்தவாறு உலகுக்கு உணர்த்தினர்.

"இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
யவையும் யவரும் தன்னுள்ளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவைகள் தனிமுதல் எம்மான்."

என்று குறிப்பிடுகிறார்.

காவியங்களிலும், ஓவியங்களிலும் பிறந்த இறைவனின் வடிவங்கள் பலவாகும். அவ் வடிவங்களைக்கொண்டு எழுந்த புராணங்களும் பலப்பல. எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்து நின்று, எல்லாவற்றையும் உருப்படுத்தும் இறை, சித்தாய்ப் பொலிகிறது. அதுவே அதன் தொல்லுருவம்; அழியா உருவம். அது வாக்கிற்கும், மனத்திற்கும் அப்பாற்பட்டது. இறைவனைக் 'காண்டற்கரியவன்' என்று ஆழ்வார் பல இடங்களில் அருளியுள்ளார். நம்மாழ்வார்,

"பல்லுருவை எல்லாம் படர்வித்த வித்தகா! உன்
தொல்லுருவை யாரறிவார் சொல்லு"

என்று வினவுகிறார். வாக்கு மனங்கடந்த முழுமுதற் பொருளை, வாக்கு மனமுடையார் எப்படி வழிபடுவது? நம்மாழ்வார் பாசுரங்களைக்கொண்டே விடை அறிவோம்.

எங்கும் கலந்து இருப்பவன் இறைவன் ஆதலின் இயற்கையை இறைவடிவாகவும், இறையாகவும் போற்றுதல் ஆன்றோர் வழக்கு. நம்மாழ்வார் பாசுரங்களை நோக்குமிடத்து மலர், ஞாயிறு, திங்கள், மலை முதலியவைகளை மட்டும் பாடினாரில்லை. அப்பொருட்களினூடே கலந்த ஓர் அகண்டாகாரப் பேரறிவைத் தம் அகக்கண்ணால் கண்டு பாடினார். ஆழ்வார் கொண்ட பூவும், ஞாயிறும், திங்களும் பிறவும் ஆண்டவன் வடிவங்களாம்,

"பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலரென்றும் காண்டொறும்-பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
எல்லாம் பிரானுருவே என்று"

இச்செய்யுளால் எல்லாம் கடவுள் மயம் என்பது தெளிவாகிறது. தொடக்கத்தில், உருவம், இயற்கை இறையை நினைவூட்டும் அறிகுறியாகக் கொள்ளப்பட்டது. வழிபாடு வாழ்க்கைக்கு இன்றியமையாதது. வழிபாடு உயிருக்கு உறுதி பயப்பது மனமொழி மெய்களால் இடையறாது ஆண்டவனை வழிபட வழிபட அன்பு நிகழும். ஆழ்வார், வழிபாட்டால் இறையன்பில் தோய்ந்து பேறுபெற்றார். அவருடைய பாசுரங்களில் பல இடங்களிலும் இவ்வுண்மை விளங்கும்.

நம்மாழ்வார் ஒரு சமரச ஞானியாவார். இறை ஒன்றே. அவ்வொன்றற்குப் பல மொழியில் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. 'நமது நெறியைப் போன்ற பிற நெறிகளும் இருக்கின்றன' என எண்ணுதல் சிறப்பு. ஆழ்வார் அருளிய சமரசக் கருத்துடைய கீழ்க் காணும் செய்யுளை நோக்கவும்.

வணங்கும் துறைகள் பலபல
வாக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல
வாக்கி அவையவைதோ
றணங்கும் பலபல வாக்கி
நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்
இணங்கும் நின்னோரை யில்லாய்
நின்கண் வேட்கை எழுவிப்பனே.

விஷ்ணு, சிவன் என்னும் சொற்களைப் பிடித்து அலைத்துப் பொருள் விடுத்துப் பூசல் செய்யும் குழுவினர், நம்மாழ்வார் அருளிய தமிழ் வேதத்தை முற்றும் ஓதிஉணர்ந்து அதன் பொருண்மை கண்டால், தம் பூசலை விடுவர்.

"யானும்தானா யொழிந்தானை யாதும்
யாவர்க்கும் முன்னோனைத்
தானும் சிவனும் பிரமனும் ஆகிப்பணைத்த
தனிமுதலை"

என்று கூறும்போதும் ஏகன், அவன் ஒருவன் என்று கூறியிருப்பதையும், ஆழ்வாரின் சமரச நோக்கத்தையும் உய்த்துணர்க.

நம்மாழ்வார் தமிழைக் குறிப்பிடும்போது "என்னால் தன்னை, இன்தமிழ் பாடிய ஈசனை"

அகந்தையுடன் செய்யும் பிரார்த்தனைக்கு எம்பிரான் எளியனன்லன். மற்று "இதைத் தருகிறேன் நீ எனக்கு அதைச் செய்" என்ற வியாபார முறையிலும் பிரார்த்தனை பயனளிக்காது.

—மகாத்மா காந்தி

என்று சிறப்பிக்கின்றார். அகத்துறைப் பாடல்களைப் பாடும்போது ஆழ்வார் பெண்மைக்குக் கொடுத்துள்ள தனிச் சிறப்பை உணரலாம்.

இறைவன் தன் உண்மை அடியார்க்கு எளியவன்; பிறர்க்கு அரியவன். இவ்வுண்மையைக் கூறும் நம்மாழ்வார், கண்ணனின் திறத்தைச் செய்யுளில் இணைத்துப் பாடும் அழகும், இனிமையும் சிந்திக்கத் தக்கது. குழந்தை கண்ணனின் ஓடிவிளையாடும் பருவம். யசோதைக்குத் தெரியாமல் வெண்ணெயை உண்டுவிடுகிறான். குறும்பு செய்த தன் மகனை யசோதை உரலுடன் கட்டிப் போடுகிறாள். உலகத்தை உதவும் உத்தமன் உரலுடன் இணைந்து இருந்து ஏங்கிய எளிய நிலைமையைப் பாடினார். செய்யுளைப் பாடி முடித்ததும், கண்ணனின் நிலையைச் சிந்தித்து அதில் ஆழ்ந்து ஆறுமாத காலம் வாய் திறவாது இறையன்பில் திளைத்தார், அச்செய்யுள் வருமாறு :—

> பத்துடை அடியவர்க்
> கெளியவன் பிறர்களுக்கரிய
> வித்தகன்; மலர்மகள் விரும்பும்
> நமரும் பெறலடிகள்
> மத்துறு கடைவெண்ணெய்
> களவினில் உரலிடையாப் புண்டு
> எத்திறம் உரலினோடு இணைந்து
> இருந்து ஏங்கிய எளிவே.

தம் வாழ்க்கையில் ஏற்படும் சில சிக்கலான நிலையில் திருவாய்மொழி நூலில் கயிறு சார்த்திப் பார்ப்பது சில பக்தர்களின் வழக்கம். சில திருவாய்மொழி ஏட்டுப் பிரதிகளில் ஒவ்வொரு பத்திலும் செய்யுளின் ஓரத்தில் உத்தமம், மத்திமம், அதமம் என்ற குறிப்பு காணப்படுகிறது. இது போன்ற குறிப்பு 76 திருவாய்மொழிகட்கு மட்டும் உள்ளன.

ஆழ்வார் திருநகரி கோயிலில் திருப்புளி தலமரமாகும். நம்மாழ்வார் அமர்ந்திருந்த பர்கமர்கிய மரத்தில் தினமும் திருமஞ்சனம், வழிபாடு நடந்து வருகின்றன. ஒரே மரமாக இருந்தபோதிலும் தனித்தனியாக ஏழு பாகங்களாகப் பிரிந்து மண்டபத்தின் மீது சாய்ந்து பார்ப்பதற்கு மிக அழகாகத் தோன்றுகிறது. இம்மரத்தின் காய்ந்த கொப்புகள் தீயில் பட்டால் இரத்தம் முதலிய துர்நீர் மரத்திலிருந்து வெளிப்படுவதாக ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயில் வரலாற்று நூலில் குறிப்பிடப்பட்டுளது. இம்மரத்தின் காய்கள் காய்ந்த போதிலும் பழுக்காமல் பிஞ்சிலேயே உதிர்ந்து விடுகின்றன. இத்தலத்தைச் சுற்றியுள்ள மரங்களிலும் காய்கள் பழுப்பதில்லை. திருப்புளியைச் சுற்றியுள்ள பீடத்தில் (மதிற்சுவர்) 108 திருப்பதி எம்பெருமான்களும், கீழ்வரிசையில் ஆச்சாரியார்களும், அதன்கீழ் வரிசையில் யானை உருவங்களும் அழகாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. நம்மாழ்வார் இளமையில் அமர்ந்தது திருப்புளியின்கீழ் என்பதை நினைவுகூர்ந்து, மதிக்கும் பொருட்டுத்தான் வைணவ கோயில்களில் புளியமுது சிறப்பாகத் தயாரித்து அன்பர்கட்கு வழங்கும் பழக்கம் நிலவி வருகிறது என்று எண்ண இடமுண்டு.

தமிழ்நாடு பெற்ற தலைசிறந்த ஞானிகளுள் நம்மாழ்வார் ஒருவர் என்பதும், அவர் சமரச நோக்கமுடைய பெரியார் என்பதும் இதனால் அறியலாகும். அவர் கூறிய உண்மைகளை உணர்ந்து கடைப்பிடித்து நடத்தல் மக்களின் இன்றியமையாத கடமை என்பதும் உணரவேண்டும்.



---

ஆண்டவன் நம்பால் வேண்டுவது பணிவேயாகும். தற்போதமற்று அவன்தாள் பணிந்திடில் அடிமை வாழ்வு நீங்கிச் சுதந்திர முக்தியடைவோம்,

—மகாத்மா காந்தி.

# காவிரி

“ உழவரோதை மதகோதை
உடைநீர்ஓதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழிகாவேரி ”

இளங்கோவடிகள்-சிலப்பதிகாரம்.

தென்னாட்டை வாழ்விக்க வந்த வள நதிகளில் ஒன்று காவிரி. தெய்வ நதிகளில் தலை சிறந்ததும் அதுவே. பாரதியார், “காவிரி தென்பெண்ணை பாலாறு தமிழ் கண்டதோர் வையை பொருனைநதி” என்று பாடியதில் காவிரியை முதலில் வைத்துக் கூறியிருப்பது நோக்கத்தக்கது. “ தண்ணீரும் காவிரியே ” என்று தொடங்கும் ஒருபாடலுமுண்டு. இவ்வாற்றுக்குக் காவேரி, பொன்னி, தென்னாட்டுக் கங்கை என்ற பெயர்களும் வழங்குகின்றன. இது குடகு நாட்டில் உற்பத்தியாகி மைசூர், கொங்கு, சோழநாடுகளின் வழியே 475 மைல்கள் ஓடி, காவிரிப் பூம்பட்டினம் என்ற இடத்தில் கடலொடு கலக்கிறது. மேற்குத் தொடர்ச்சி மலையின் சையமலை அல்லது பிரமகிரி என்ற மலையில் தோன்றுகிறது. நீரூற்றுள்ள ஒரு சிறு குளத்தில் புறப்படுகிறது. இதைத் தலைக்காவிரி என்பர். அவ்விடத்தே காவிரியம்மனின் திருக்கோயிலும் இருக்கிறது.

காவிரி யாற்றின் உற்பத்தியைப் பற்றிய புராண கதைகள் உண்டு. இந்திரன், சூரபதுமனுக்கு அஞ்சிச் சீர்காழியில் சிவபெருமானை நோக்கித் தவமிருந்தான். வழிபாட்டிற்காக அவன் அமைத்த நந்தவனம் மழையில்லாததால் வாடியது. அங்கு வந்த நாரதர், சையமலையிலிருக்கும் அகத்தியர் கமண்டலத்தில் காவிரி இருப்பதாகவும், அதைப் பூமியில் பாயச் செய்வது விநாயகப் பெருமானால் முடியும் என்றும், அப்படிச் செய்தால் இந்திரன் நந்தவனம் செழிக்கும் என்றும் தெரிவித்தார். இந்திரன் அவ்வாறே ஆனைமுகனை வேண்ட அவர் ஒரு காகஉருக் கொண்டு சென்று அகத்தியர் கமண்டலத்தைக் கவிழத்தார். அது ஆறுகப் பெருகி இந்திரன் நந்தவனத்தைச் செழிக்கச்செய்தது. காகம் கவிழ்த்த கரக நீர்ப் பெருகி ஆறுக விரிந்து ஓடுவதால் “ கா விரி ” என்றும், இந்திரன் அமைத்த கா (நந்தவனம்) வளம்பெற விரிந்தமையால் “ காவிரி ” என்றும் பேர் வந்ததென்பர். “சுரகுலாதிபன் தூய்மலர் நந்தனம் பெருகவார் கடல் பெய்த வயிற்றினேன் கரக நீரைக் கவிழ்த்த மதகரி” என்று பிரபுலிங்க லீலை கூறுகிறது.

இன்னும், ஆக்கினேய புராணத்தில் ஒரு வரலாறு உண்டு. கவேர முனிவர் என்பவரின் மகள் திருமாலின் ஆணைப்படி புண்ணியத் திருநதியாகப் பெருக்கெடுத்து ஓடி தன் தந்தைக்கு நற்கதி நல்கினள். அதனல் “ காவேரி ” என்ற பேர் உண்டாயிற்று.

சைய மலையில் புறப்பட்ட அருவி, பாக மண்டலம் என்ற இடத்தில் ஆறு என்னும் உருவத்தை அடைகிறது. பிறகு பல சிற்றுறுகள் இதனுடன் சேர்கின்றன. கனகா, ஏமாவதி, இலட்சுமண ஆறு, உலோக பவானி, கப்பினி, சுவர்ணவதி, ஷிம்ஷா, அர்க்காவதி, சனத்குமார ஆறு, தோப்பூர் ஆறு, பவானி, நொய்யல், திருமணிமுத்தாறு, அமராவதி, கரைபோட்டானறு இவைகள் காவிரியின் உபநதிகள்.

காவிரி மூன்று இடங்களில் பிரிந்து கூடித் தீவுகளை ஏற்படுத்தியுள்ளது. அவ்

---

ஆண்டவன் நம்முள் நின்று உணர்த்துகிருன் என்ற நம்பிக்கை யில்லாவிடில் பிரார்த்தனை செய்ய முடியாது.

—மகாத்மா காந்தி

வாறு அமைந்ததை அரங்கம் என்றும், துருத்தி என்றும் சொல்வர். சீரங்கப்பட்டணத்தில் இருக்கும் தீவிற்கு ஆதிரங்கம் என்றும், சிவசமுத்திரத்தருகில் மத்தியரங்கம் என்றும், திருச்சிராப்பள்ளிக்கு அண்மையில் திருவரங்கம் என்றும் மூன்று புண்ணியத்தலங்களாகத் திகழ்கின்றன.

சிவசமுத்திரம் என்ற இடத்தில் ஆறு இரண்டாகப் பிரிந்து இரண்டு நீர்வீழ்ச்சிகளாக விழுகின்றன. இவைகளுக்கு ககனசுகி, பார்சுகி என்று பேர். நீர்வீழ்ச்சி சுமார் 250 அடி உயரம். வீழ்ச்சியின் காட்சி மிகவும் வனப்புடையது. கொஞ்சதூரம் ஆறு ஓடிய பின் குறுகிய இருமலைச் சரிவுகள் வழியே ஓடுகின்றது. ஓர் இடத்தில் பன்னிரண்டடி அகலம்தான். அதை மேகதாடு அல்லது ஆடு தாண்டும் காவிரி என்பர். பிறகு மைசூர் நாட்டை நீங்கி கொங்கு நாட்டிற்கு வரும்போது 'ஹொகெனகல்' என்ற நீர்வீழ்ச்சியாகக் காட்சி யளிக்கிறது.

இவ்வாற்றில் அணைகள்கட்டி கிருஷ்ணராஜ சாகரம், மேட்டூர் என்ற இரண்டு நீர்த்தேக்கங்கள் உள்ளன. இவை மின்சார உற்பத்தி செய்து, உழவு மற்ற கைத்தொழில்களை வளர்த்துப் பயன்படுகின்றன. இவையேயன்றி இந்த ஆற்றின்குறுக்கே மேலணை, கல்லணை, கீழணை என்ற மூன்று அணைகள் கட்டப்பட்டிருக்கின்றன. காவிரி, கொள்ளிடம் இவைகளைச் சேர்க்க ஒரு உள்ளாறு உண்டு. அந்த இடத்தில் தான் ஒரு சோழ மன்னனால் கல்லணை கட்டப்பட்டது, இந்த சோழ மன்னன் மதிநுட்பத்தை இன்றும் அறிஞர் வியந்து பேசுகின்றனர். சோழன் கரிகாலன் என்பவன் காவிரிக்கு இரு மருங்கிலும் கரைகளை யமைத்தான். அதனால் புலவர்கள் அவனை "காவிரிபுரக்கும் நாடு கிழவோன்" என்று பாடினார்கள்.

இவ்வாற்றிலிருந்து பல ஆறுகள் பிரிந்து சோழநாட்டை வளம் படுத்துகின்றன. கொள்ளிடம், வெண்ணாறு, வடவாறு, திருமலைராஜன், முடிகொண்டான், வெட்டாறு, அரிசிலாறு, விரசோழன் இவைகள் முக்கிய கிளைநதிகள். இவ்வாறுகளின் உதவியால் செந்நெல் விளைந்து பொன் கொழிக்கச் செய்வதால் மூல நதியான காவிரியைப் 'பொன்னி' என்று பேரிட்டழைத்தனர்.

புலவர்களும், அடியார்களும் இவ்வாற்றைப் பலபடப் புகழ்ந்து பாடியுள்ளனர். மணிமேகலை ஆசிரியர், "சோழர் தம் குலக்கொடி," "தண்டமிழ்ப்பாவை" என்று கூறுகிறார். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள், "சோழர் தம் தெய்வக்காவிரி" என்றும், "தண்ணறுங்காவிரித் தாதுமலி பெருந்துறைப் புண்ணிய நன்னீர்" என்றும் இதன் தெய்விகத்தன்மையைப் போற்றுகிறார். கம்பர் "தெய்வத் திருநதி" என்கிறார். அப்பர், "பொன்னி தீர்த்தம்" என்று கூறி அதன் புண்ணியத்தன்மையை உணர்த்துகிறார். சம்பந்தர், அதில் மூழ்குவார் இடர் தீர்க்கும் பழங்காவிரி எனச் சொல்கிறார். சுந்தரர், "புகழுமா சந்தனத்துண்டமோடு அகிலும் பொன்மணி வரன்றி நன்மலருந்தி, அகழுமா அருங்கரை வளம்படப் பெருகி ஆடுவார் பாவந்தீர்த்து அஞ்சனம் அலம்பித் திகழுமாகாவிரி" என்றும், "எண்திசையோர்களும் ஆடவந்திங்கே சுழிந்திழி காவிரி" என்றும், "தவம் செய்யும் போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச் செல்லுமாகாவிரி" என்றும் அழகுபட உரைக்கிறார். "கங்கையிற் புனிதமாய காவிரி" என்பர் தொண்டரடிப்பொடியாழ்வார். காமாட்சியம்மையின் கருணைப் பெருக்குபோல ஓடுகிறது காவிரி என்று பெரியபுராண ஆசிரியர் சேக்கிழார் கூறுகிறார்.

இப்புண்ணியப் பேராற்றின் கரையில் பல திருப்பதிகள் உள்ளன. இது கடலொடு கலக்குமிடத்தில் புகார் என்ற காவிரிப்பூம்பட்டினம் பெரிய துறைமுகமாக இருந்து கடல் கொள்ளப்பட்டது. இங்குக் கப்பல்கள் வந்து தங்கியிருந்ததாகப் பட்டினப்பாலை என்ற நூல் கூறுகிறது. "கலம் (கப்பல்) எலாம் கடல் மண்டு காவிரி நங்கை யாடிய கங்கை நீர்புலம் எலாம் மண்டிப் பொன் விளைக்கும்" என்று சுந்தரர் சொல்கிறார். பாடல் பெற்ற பதிகளைக் கணக்கிடும்போது

---

நாம் பேசிக்கொண்டே யிருப்போமாகில், ஆண்டவன் உள் நின்று உணர்த்தும் அமைதிச் சொற்கள் நமக்குக் கேளா.

—மகாத்மா காந்தி

# திருக்குற்ருலக் காட்சி

[G. கலியாணம் M.A., Dip. Econ.,]

மரங்கள் செறிந்த மலைத்தொடர்ச்சி; மலைச்சரிவினின்றும் விழும் ஓர் அழகிய நீர் வீழ்ச்சி; வீழ்ந்து ஓடும் அருவியின் பாங்கர் அமைந்திருப்பது ஆலயம்; அவ்வாலய வாயிலில் பல அடியவர் குழுமி யிருக்கின்றனர்; அவர்களுள் தாரகைகள் நடுவே தயங்கும் தண்மதியென ஓர் இளஞ்சிருர் நிற்கின்ருர்; ஆண்டவனை அகங்குழைந்து பாடுகின்ருர்:—

" வம்பார் குன்றம் நீடுயர்
சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண்
டியாழ்செய் குற்ருலம்
அம்பால் நெய்யோ டாடல்
அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர்
போலும் நமரங்காள் "

இது நடந்து சற்றேறக்குறைய 1300 ஆண்டுகள் இருக்கும். அதே காலத்தில் வதிந்தார் மற்ருெரு பெரியார்; "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதை வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டவர்; முன்சொன்னவரினும் வயதில் முதிர்ந்தவர்; திருக்குற்ருலத்திற்குச் செல்லாத நிலைமையில் சேய்மையினின்றே துதிக்கிருர்; உடலெடுத்த பெரும் பயன் உமைபங்கனை வழிபடும் பொருட்டே என்பதை வற்புறுத்தப் புகுந்தவர், திருவங்கமாலையைப் பாடுகிருர்; அதில் " உற்ருராருளரோ உயிர்கொண்டு போம்பொழுது குற்ருலத்துறை கூத்தனல்லால் நமக்குற்ருராருளரோ" என்று குறையிரந்து நிற்கிருர். இவ்விரு அடியவரும் நிலவிய காலத்துக்கு முன்போ பின்போ இருந்தவர் என ஆராய்ச்சியாளர் முடிவுக்கு அகப்படாத மற்ருெரு அடியார் ஒருவர்; அவர்தம் மணிமொழிகளால் பணியணி பரமனை அணிமாலை சாற்றிப் புகழ்கின்றவர்; முற்கூறிய அடியார் கருத்தே போல ஒரு பாட்டினை அருளுகின்ருர்:—

" உற்ருரை யான்வேண்டேன்
ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்ரு ரையான் வேண்டேன்
கற்பனவும் இனியமையுங்

---

ஆன்ருேர் காவிரிக்கு வடக்கிலுள்ள தலங்கள், தெற்கிலுள்ள தலங்கள் என்று பிரித்திருப்பதை நோக்கின் அதையவர்கள் எவ்வளவு புனிதமானதாகக் கருதினுர்கள் என்று தெரிகிறது.

திருப்பாண்டிக் கொடுமுடி, திருப்பராய்த்துறை, குணசேகரபுரம், உறையூர், திருவரங்கம், திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி, திருவையாறு, திருக்குடந்தை, திருவிடைமருதூர், திருமயிலாடுதுறை (மாயூரம்) இவை காவிரிக் கரையிலுள்ள சில முக்கியமான பதிகள்.

ஐப்பசி மாதத்திலும், தை அமாவாசையிலும் காவிரியில் மக்கள் திரளாக நீராடுவர். இதைப் புனித தீர்த்தமாகத் தொன்று தொட்டு இன்றுவரை எல்லோரும் கொண்டாடுகின்றனர். "காவிரி மணலின் பலவாக வாழிய" என்றும், "கல்லும் காவிரியும் உள்ளநாள்வரை" என்றும் கூறுவது இந் நாட்டு மரபு. காவிரி ஆற்றின் தண்ணீர் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பங்கு பயன்பட்டு ஐந்து பங்கு தண்ணீரே கடலுக்குப் போகிறது என்றும், உலகத்தில் வேறு எந்த ஆறும் இவ்வளவு பயன்படவில்லை யென்றும் அறிஞர் கூறுகின்றனர். இத்தகைய பெருமை, தொன்மை, தெய்வத் தன்மை பொருந்திய காவிரியில் நீராடிப் புனிதமடைவோமாக.

---

உண்மையை நாடவிழைபவன் ஊமையாகத்தானிருக்கவேண்டும். மௌனத்தின் பெருமையை நான் நன்குணர்வேன்.

—மகாத்மா காந்தி

குற்றாலத் தமர்ந்துறையுங்
கூத்தாஉன் குரைகழற்கே

கற்றாவின் மனம்போலக்
கசிந்துருக வேண்டுவனே.''

இவ்வாறு ஆன்றோர்களால் போற்றப் பெற்றிருக்கும் தலத்தைப்பற்றிக் கூறுவதே இக் கட்டுரையின் நோக்கம். இது திருநெல்வேலிச் சீமையில் தென்காசி புகைரதச் சாலையினின்றும் 3½ கல் தூரத்திலுள்ளது. தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்களில் இதுவுமொன்று. இவ்வூர் கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 550 அடி உயரத்தில் மேற்குத் தொடர்ச்சி மலையின் சரிவில் இருக்கிறது. இவ்வூரைக் குற்றாலம் என்றும், குறும்பலா என்றும் தேவாரம் குறிக்கிறது. தலபுராணத்தில் இதற்கு 21 பெயர்கள் உண்டு என்பதைத் தலமகிமைச் சருக்கத்தில் பின்வருஞ் செய்யுட்களில் கூறப்பட்டிருக்கிறது :—

''பிதுர்கண்டந் தீர்த்த புரஞ்சிவத்து
ரோகந்தீர்த்த பெருமைமூதூர்

மதுவுண்டானுயிர் மீட்டபுரம்
பவர்க்கமீட்டபுரம் வசந்தப்பேரூர்

முதுகங்கை வந்தபுரஞ் செண்பகாரணிய
புரமுத்தி வேலி

நதிமுன்றின் மாநகரந் திருநகர
நன்னகர ஞானப்பாக்கம்.

வேடன்வலஞ் செய்தபுரம் வேழம்பூ
சித்தபுரம் வேதசக்தி

பீடபுரஞ்சிவ முகுந்தபிரமபுர முனிக்
குருகும் பேரூர்தேவ

கூடபுரந் திரிகூடபுரம் புடார்ச்
சுனபுரம் பொற்குறும்பலாவி

சேடபுரமென விருபத்தொரு நாமம்
பெற்றபதி திருக்குற்றாலம்.''

கல்வெட்டுகளில் ''தென்வாரி நாட்டுத் திருக்குற்றாலம்'' என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ''திருக்குற்றாலர் தென்னாரியநாடே'' என்று கூறுவர் குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர். ஆங்கிலத்தில் கோர்ட்டாலம் (Courtallam) என வழங்குகிறது.

ஈண்டுச் சிவபெருமான் கோயில் ஒன்று கிழக்கு நோக்கியுளது. இது சங்கு வடிவமாய் அமைக்கப்பட்டிருக்கிறது. அதை, ''நத்தமே சதுரங் கூர்ம நளினஞ்சக் கரமென்றாய உத்தமா லயமோரைந்தில் உயர்ந்தது பணிலக் கோயில்'' என்று தலபுராணம் சிறப்பாகக் கூறுகிறது. ஆலயமும் பூசை முதலியனவும் மகுடாகமப்படி இருக்கின்றனவாம். சித்திரை, ஐப்பசி, மார்கழி இம்மாதங்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. சுவாமியின் பெயர் திருக்குறும்பலா ஈசர், திருக்குற்றால நாதர். அம்பிகையின் திருநாமம் குழல்வாய் மொழியம்மை. அம்மன்கோயில் நாட்டுக் கோட்டை செட்டியார் ஒருவரால் புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. ஈசன்கோயில் பழைமையாகவே இருக்கிறது. கோயில் முன்னால் திருமால் கோயிலாக இருந்து பின்பு சிவன் கோயில் ஆயிற்று என்று சொல்லப்படுகிறது. கந்தபுராணம் அசுரகாண்டம் திருக்குற்றாலப் படத்திலும், தல புராணத்தில் திருமால் சிவபிரானான சருக்கத்திலும் இவ்வராலாறு காணப்படுகிறது.

முதலில் கந்தபுராணத்தில் கூறியிருக்கும் வரலாற்றைப் பார்ப்போம். கைலைநாதன் ஆணையைத் தலைமேற்றாங்கி அகத்திய முனிவர் வடக்கிருந்து தென்னாடு போந்தார்; திருக்குற்றாலத்தைக் குறுகினார். ஆங்குள்ள வைணவர்கள் அவரை ''திருநீறும் கண்மணியும் அணிந்துகொண்டிருக்கிறாய்; தேவர்களும் அறிய உலகில் பிச்சை எடுத்தவனுக்குத் தொண்டன் நீ; ஆதலால் இவ்வூரை அணுகாது அகல்வாய்'' என்றனர். அவர்கள் அகந்தையை அடக்க எண்ணித் தம் மாயா வல்லமையால் பாகவத உருக்கொண்டு அகத்தியனார் மறுபடியும் வந்தார். வந்தவரை வைணவர்கள் வரவேற்று அறிதுயில்அமர்ந்த அண்ணல் கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். பாகவதர் வலம் வந்து வைணவர்களை நோக்கி ''வழிபடும் விருப்புடையேன்; திருமஞ்சனம் முதலியன கொணர்மின்'' என, அவர்களும் கொண்டுவந்தனர். ''நான் அருச்சிக்

---

ஒரு உண்மையை மாற்றிப் பேசுவதும், போற்றிப்பேசுவதும், மறைத்துப் பேசுவதும் மனித சுபாவம். அக்குற்றங்களினின்றும் நாம் விடுபடுவதற்கு மௌனம் ஓர் சிறந்த வழியாகும்.

—மகாத்மாகாந்தி.

கும் விதிமுறையைப் பாருங்கள்" என்று சொல்லி,

"அறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம்
பெருமானை யகத்துட் கொண்டு
சிறுகுமுரு வுடையமுனி நாரணனுர்
திருமுடிமேற் செங்கையோச்சிக்
குறுகுகுறு கெனவிருத்தி யொள்னரக்கிற்
புனைபாவைக் கோலமீது
மறுகுதழலுற் றென்னக் குழைவித்தோர்
சிவலிங்க வடிவஞ் செய்தான்"

அதைக் கண்ட வைணவர்கள் அவரைப் பிடிக்கச் சூழ, அகத்தியர் நோக்கினின்றும் கோபத்தீயெழுந்தது. அதற்கு அஞ்சி வைண வர்கள் அவ்வூரைவிட்டு ஓடிவிட்டனர். "இன்று முதல் சிவனிடம் ஈதாயிற்று" என்று சொல்லி அகன்றார் அகத்தியனுர்.

தலபுராணத்தில் கதை சிறிது மாறுத லோடு காணப்படுகிறது. வைணவர்கள் கோயிலுக்குள் போகாமல் தடுத்தனர். அகத்தியனுர் "பின்னுமதிச் சடை யார்க்கும் பெருந்திகிரிப் படையார்க்கும் பேதம் யாதும் இல்லை" யெனப் பலவாறு எடுத்துக் கூறியும் கேட்டார்களில்லை. ஆத லின் அவர் அகன்றுபோய் அணித்தே இலஞ்சி யென்னும் பதியில் கோயில் கொண் டிருக்கும் குமரனை நோக்கிக் குறையிரந்தார். அப்பெருமான் ஆணையிட்ட வண்ணம் வைணவக் கோலங்கொண்டு திரும்பிவந்து குற்றாலக் கோயிலினுட்புக்கு திருக்கடைக் காப்பு செய்து

" முறுகுவலம் புரிக்கரத்து மான்குறுகப்
பெரியதுழாய் முடியின்மீது
சிறியமதிக் கலைகுறுகத் திலகநுதல்
விழிகுறுகச் செழும்பூண் மார்பி
னிறையரவப் பணிகுறுக நிகிலவுல
கமுநிறைந்து நீண்ட மேனி
குறுகுறுகெ னப்பரவித் திருவடிக்கீழ்க்
குறுமுனிவன் குறுகுங்காலை"

ஆண்டவன் சிவலிங்க வடிவாயினன். "குறு குடாப்பா குற்றாலப்பா" என்ற பழமொழி இப்பொழுதும் அப்பக்கங்களில் வழக்கிலுள் ளது. நீலமேனி நெடியோன் கோயில் ஆல முண்ட அண்ணல்கோயில் ஆன வரலாறு ஓர் உண்மை நிகழ்ச்சியையே குறிக்க வேண்டு மென்று அறிஞர்கள் கருதுகின்றனர். அது எவ்வாறாயினும் ஆக.

இப்பதியில் கூத்தப் பெருமானுக்கே முதன்மை கொடுக்கப்பட்டிருக்கிறது. குற்றால நாதர் கோயிலுக்கு வடபால் கூத்தப்பெரு மான் ஆலயம் உளது. "குற்றாலத்துறை கூத்தன்" என அப்பர் சுவாமிகளும், "குற் றாலத்தெங் கூத்தா போற்றி" என மணி வாசக அடிகளும் போற்றி யிருக்கின்றனர். ஐந்து மன்றங்களான இரத்தின சபை, பொற் சபை, வெள்ளிச்சபை, தாம்பிரசபை, சித்திர சபை என்பவற்றுள் இது சித்திரசபை. மற் றவை திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி என்பன. தலபுராணமுடையார் "வைத்த தாம்பிரம் பொன் வெள்ளி சித்திர மணி மன்றைந்திற் சித்திரப் பொதுவே மேலாஞ் சிறப்பொதுவென்னும் வேதம்" என்று கூறியிருக்கின்றனர். குறும்பலா ஈசர் கோயி லில் திருமாலுக்கும், அகத்தியனுருக்கும் கோயில்கள் உள்ளன. பராசத்தி பீடம் தனிச் சிறப்புடையது. இத்தலத்தின் சிறப்புமரம் பலா. அதை நான்மறை வடிவம் என்பர். காழிப்பிள்ளையார் இதற்கெனத் தனியே திருக்குறும்பலாப்பதிகம் ஒன்று பாடியிருத்த லால் மிக்க மகிமை வாய்ந்ததென்பர். குறும் பலாவின் கனிகள் கசக்குமென்றும், மனி தர்கள் அவற்றை உண்ணக் கூடாதென்றும், குரங்குகளே தின்கின்றன என்றும் அங்கு ளோர் சொல்லுகின்றனர்.

இனி, தீர்த்தங்களைப் பற்றிச் சிறிது கூறுவோம். தலபுராணத்தில் ஐந்து தீர்த் தங்கள் கூறப்படுகின்றன. அவை சிவமது கங்கை (தேனருவி), செண்பகத் தடாகம், பொங்குமாகடல், வடவருவி, சித்திராநதி என்பன. சிவமது கங்கை அல்லது தேனருவி (Honey falls) ஊரினின்றும் மலைமேல் 3 கல் தூரத்துளது. செங்குத்தான பாறைப் பிளவி னின்றும் சுமார் 100 அடி உயரத்திலிருந்து விழுகிறது. அதற்கப்பால் மலையடி வாரத்தி னின்றும் ஒரு கல் தூரத்தில் சுமார் 20 அடி உயரத்திலிருந்து தண்ணீர் கீழே ஒரு குளத்

மௌனத்தில்தான் நாம் ஆண்டவனைக் காணவும் பேசவும் முடியுமென்பவை என் அனுபவத் தால் நன்கறிவேன்.
—மகாத்மா காந்தி.

தில் விழுந்து வழிந்து ஓடுகின்றது. இதையே சண்பகத் தடாகம் என்பர். இந்த இடத்திற்குச் சண்பக அடவி என்று பெயர். அது நாளடைவில் மருவி சண்பகாதேவி என மாறிவிட்டது. அத்துடனில்லாமல் சண்பகாதேவி என்ற பெயரால் ஓர் அம்மன் கோயிலும் கட்டப்பட்டு வழிபாடு நடைபெறு கிறது. இப்பெயர்த்திரிபைக் கூறுங்கால் மற் றொரு செய்தியையும் ஈண்டுக் கூறுமலிருக்க முடியவில்லை. அதாவது, குற்றாலத்தின் ஒரு பகுதி காசா மேஜர்புரம் என்று காசா மேஜர் (Mr. Casa major) என்ற ஆங்கிலேயர் பெய ரால் ஏற்பட்டிருக்கின்றது. மக்கள் அதைக் கா சி மே சி பு ர ம் என வழங்குகின்றனர். அதையே பத்திரிகைகளில் சிலர் காசிமகேசு வரபுரம் என்று குறித்திருக்கின்றனர். காசா மேஜர், காசிமகேசுவரர் ஆனது விந்தையி னும் விந்தையன்றோ ! இது நிற்க, சண்பகப் பொய்கையினின்றும் மலையின் மீதேயே ஓடி வந்த அருவி சுமார் 260 அடி உயரத்தி லிருந்து கீழே வீழ்கின்றது. முதலில் அது பெரும் பள்ளத்தில் வீழ்வதை நோக்கினல் பொங்குவதுபோல் தோன்றுகின்றது. அத ஞல் அதற்குப் **பொங்குமா கடல்** என்று பெயர். பள்ளத்தினின்றும் வழிந்து வீழ்வதை **வடவருவி** யென்றும், அங்கிருந்து பூமியில் ஆறுக ஓடுவதே **சித்திரா நதி** என்றும் கூறு கின்றனர். மேற்சொன்ன ஐந்து தீர்த்தங் களே யன்றிக் குற்றாலத்தில் புலியருவி, சிற் றருவி (Forest falls), ஐந்தருவி (Five falls) என்ற நீர்வீழ்ச்சிகளும் இருக்கின்றன. மக்கள் பெரும்பாலும் வடவருவியிலேயே நீராடுகின் றனர்.

திருக்குற்றாலத்தைப்பற்றிச் சம்பந்தர் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். அவற்றில் இயற்கையன்னையின் எழில் நலத்தை வாயா ரப் புகழ்கின்றார். "மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி, குலையார் வாழைத் தீங்கனி மாந்தும்" காட்சியை நாம் இன்றும் காண லாம். அப்பமூர்த்திகள் திருவங்க மாலையில் குற்றால நாதரைக் கூறியிருக்கின்றார். மணி வாசகப் பெருந்தகை "உற்றாரை யான்வேண் டேன்......" என்று தொடங்கும் செய்யு ளில் கூறியிருப்பதன்றி, "குற்றாலத்துக் குறியாயிருந்தும்" என்றும், "குற்றாலத்தெங் கூத்தா போற்றி" என்றும்" "குற்றா லத்தெம் குழகனே" என்றும் குறித்திருக்கின்றனர். பட்டினத்தடிகள்,

" காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே-மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு "

என்று அருளியிருக்கின்றார். மற்றும் இற் றைக்குச் சற்றேறக்குறைய 250 ஆண்டுகள் முன் வதிந்த மேலகரம்—திரிகூட ராசப்பன் கவிராயர் என்ற புலவர் சிகாமணி தலபுரா ணம், குறவஞ்சி, குற்றாலமாலை, குற்றாலச் சிலேடை வெண்பா, குற்றால யமக வந்தாதி, குற்றாலஉலா, குற்றால ஊடல், பரம்பொருள் மாலை, குற்றாலக்கோவை, குழல்வாய் மொழி கலிப்பாமாலை, குழல் வாய் மொழி கோமளமாலை, குழல்வாய் மொழி வெண்பா வந்தாதி, குழல்வாய்மொழி பிள்ளைத் தமிழ், நன்னகர் வெண்பா எனப் பதினன்கு நூல்களை யாத்திருக்கின்றனர். தலபுராணம், குறவஞ்சி. குற்றாலமாலை என்ற இவையே அச்சுவாகனம் ஏறி யிருக்கின்றன. இப்பொழுது குற்றால உலா, யமகவந்தாதி. சிலேடை வெண்பா முதலியவும் அச்சாகிக் கொண்டு வருகின்றன. தலபுராணம் தான வைபவகாண்டம், சிவரகசிய காண்டம் என இருபிரிவுகளை உடையதாய் கடவுள் வணக் கம் அவையடக்கம் நீங்கலாக 32 சருக்கங் களைக்கொண்டதாக இருக்கிறது. அது இலக் கியச் சுவை ததும்பும் ஓர் இனிய நூல். குற்றாலக் குறவஞ்சியோ குறவஞ்சிகளில் தலை சிறந்ததென அறிஞர்கள் கண்ட முடிபு.

" ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
ஒடுங்கக் காண்பது யோகிய ருள்ளம்
வாடக் காண்பது மின்னர் மருங்கு
வருந்தக் காண்பது சூலுளை சங்கு
போடக் காண்பது பூமியில் வித்து
புலம்பக் காண்பது கிண்கிணிக் கொத்து
தேடக் காண்பது நல்லறங் கீர்த்தி
திருக்குற் றாலர்தென் னரிய நாடே "

---

ஆண்டவனுடைய இலக்கணங்கள் பலவாறாகக் கூறப்படுகின்றன. ஏன்? அவன் எல்லாமாய்த் திகழ்கின்றான்.
—மகாத்மா காந்தி.

என்ற ஒரு செய்யுளே இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். மலைவளத்தைக் கூறப்போந்த குறத்தியின் வாயிலாக,

" வானரங்கள் கனிகொடுத்து
மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு
வான்கவிகள் கெஞ்சும்,
கிழங்குகிள்ளித் தேனெடுத்து
வளம்பாடி நடப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து
வெம்புதினை யிடிப்போம் "

என்றெல்லாம் கவி மொழிகளை வாரி வழங்குகிறார். இவைபோன்ற பல பாடல்கள் சுவைக்கச் சுவைக்கத் தெவிட்டாத தெள்ளமிழ்தம் என்று கூறுவது மிகையாகாது. குறவஞ்சியின் பெருமையை வியந்தே அக்காலத்துத் தென்னாட்டை ஆண்டு வந்த முத்துவிசயரங்க சொக்கநாத நாயக்கரவர்கள் முற்றூட்டாக நிலம் கொடுத்தார். இதற்கொரு செப்பேடுமுள்ளது. இந்த நிலம் இப்பொழுதும் குறவஞ்சிமேடு என்ற பெயருடன் ஆசிரியரின் சந்ததியார் ஆட்சியிலிருக்கிறது.

இனி, குற்றாலத்திலுள்ள கல்வெட்டுக்களைப்பற்றிச் சற்று ஆராய்வோம். குற்றாலநாதர் கோயிலின் இரண்டாவது சுற்றுத் தென் மதிற்சுவரில் பாண்டிய மன்னர்களின் 15-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களும், கோயிலுக்குத் தென்புறம் ஒரு தூணில் கல்வெட்டும் காணப்படுகின்றன. இவைகள் கோயிலுக்கு நிலங்களை மானியமாக விடப்பட்டதைக் குறிக்கின்றன. பரதேசிப்புதை என்ற ஒரு குகையில் 15 எழுத்துக்களாலான ஒரு கல்வெட்டு இருக்கிறது. அது எம்மொழி எழுத்துக்கள் என இதுவரை எவராலும் கண்டு பிடிக்கப்படவில்லை.

கல்வெட்டுக்களே யன்றிச் சில செப்பேடுகளும் உள்ளன. இரண்டு செப்பேடுகள் திருநெல்வேலிச் சீமை வேளாளர்கள் கோயில் மாலைக் காலப் பூசைக்கு வரி கொடுப்பதாகச் சம்மதித்ததையும், அவ்வரியை வாங்கிச்சேர்த்துக் கொடுப்பதாகத் திருவாவடுதுறை மடத்தார் ஒப்புக்கொண்டிருப்பதையும் கூறுகின்றன. இன்னுமொரு செப்பேட்டினின்றும் ஊரார் சிலர் கோயிலுக்கு வரி செலுத்துவதாக ஒப்புக்கொண்டதாகத் தெரிகிறது. மற்றுமொன்று வரகுணராம குலசேகரபாண்டியன் காலத்தில் இருசேனையிலுள்ள வீரர்கள் கோயில் மாலைக்கால பூசைக்கு ஆண்டு தோறும் தலைக்கு இவ்வளவு பணம் கொடுப்பதென ஏற்பாடு செய்திருப்பதைக் காட்டுகிறது.

குற்றாலம் தென்னிந்தியாவில் ஒருசிறந்த சுகவாசத் தலமாகவும் விளங்குகிறது. அங்கே ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் குளிர்ந்த சாரற்காற்று வீசுகிறது. அப்பொழுது அநேகர் உடல் நலத்திற்காக அங்கே வந்து தங்குகின்றனர். நீர் வீழ்ச்சியில் மூழ்குவதால் நோய்கள் இயற்கையாகக் குணமடைகின்றனவாம். "போதும் பொன்னு முந்தியருவி புடைசூழக் கூதன்மாரி நுண்துளி தூங்குங் குற்றாலம்" என்று சம்பந்தர் கூறியிருப்பது சாரற்காற்றையே குறிக்கும் போலும்.

மலைத்தொடர்ச்சியின் மாட்சி, நீர்வீழ்ச்சிகளின் காட்சி, சாரற்காற்றின் குளிர்ச்சி, சோலைகளின் எழில், ஆலயத்தின் அமைப்பு இவைகள் மனத்திற்கின்பம் தருவன. அளப்பருந்தன்மை வளப்பெருங் காட்சியை அங்கே காணலாம். ஆதலின் அன்பர்களே! இதுவரை நீங்கள் திருக்குற்றாலம் சென்றிராவிட்டால் ஒருமுறையாவது சென்று, சிலநாட்களாவது தங்கியிருந்து இயற்கையன்னையின் எழிலில் திளைத்து, நீர்வீழ்ச்சிகளில் படிந்து, திருக்குறும்பலா ஈசரை வழிபட்டு உடல் நலமும் உயிர்நலமும் எய்துமாறு வேண்டுகின்றேம். அப்படிச் செல்லுங்கால், குற்றாலத்திற்கண்மையிலுள்ள இலஞ்சி, தென்காசி, திருமலை என்னும் தலங்களையும் தரிசிப்பீர்களாக.

—சித்தாந்தம்.

  

---

தண்ணீரில் நீந்த வேண்டுமானல் நம் கனத்தைக் குறைத்துக்கொண்டு தக்கைபோல் மிதக்க வேண்டும். அதேபோல் தானென்ற செருக்கற்றால் இறைவனைக் காணலாம். —மகாத்மா காந்தி.

---

# அருணகிரிநாதர்

'வாக்கிற் கருணகிரி' என்பது ஆன்றோர் கூற்று. இத்தகைய வாக்குவன்மை வாய்ந்த அருணகிரிநாதர் முருகப்பெருமான் தொண்டர்களுள் தலைசிறந்தவராகக் கருதப்படுகிறார். அவர் பாடியுள்ள திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருவகுப்பு முதலியவை என்றும் நிலைத்து விளங்கும் பக்திப் பாடல்கள். இவரைப்பற்றிய வரலாறு பலவாறு கூறப்படுகின்றது. சில ஆதாரமற்றவை; சில ஒன்றுக்கொன்று முரண்பாடானவை; வேறு சில பகுத்தறிவுக்கு ஒத்துக்கொள்ள முடியாதவை. பல ஆராய்ச்சி அறிஞர்களின் முடிபுகளைக்கொண்டு அருணகிரிநாதர் வாழ்க்கை வரலாற்றை ஒருவாற்றான் கூறலாம்.

அருணகிரிநாதர் திருவண்ணாமலையிற் பிறந்தவர். இவருடைய தாய்தந்தையரின் முழு விவரங்கள் அறிவதற்கில்லை. பட்டினத்தடிகளுக்கும், ஒரு உருத்திர கணிகைக்கும் மகனாக இவர் பிறந்தார் என்ற கதை முற்றும் புறக்கணிக்கத்தக்க காரணங்கள் பல உள. பட்டினத்தடிகள் வாழ்ந்த காலம் வேறு; அருணகிரியார் இருந்த காலம் வேறு. அவருடைய தாய் உருத்திர கணிகையர் அன்று. "சிலமுள்ள தாயர் தந்தை மாது மனையான மைந்தர்" என்று அவர் கூறுவதால் நல்ல ஒழுக்கமுள்ள தாய்தந்தையர் வயிற்றிற் பிறந்து மனைவாழ்க்கை நடத்தியவர் என்று தெரிகிறது. அவரை "சோணாத்திரி நாதர்" என்ற அந்தணர் என்றும் சிலர் கூறுவர். ஆனால் "நாலானவேத நூலாக மாதி நானோதினேனு மிலை" என்று ஒப்புக்கொள்வதால் அந்தணராக இருக்க முடியாது. வடமொழிச் சொற்களைக் கலந்து பாடும் வல்லமையைக் கொண்டு மாத்திரம் இவர் அந்தணர் என்று முடிவு கட்டுவது சரியன்று. வடமொழியில் புலமை பெற்றிருக்கலாம் என்று கொள்வதே சாலச் சிறந்தது.

இவர் வாழ்ந்த காலம் பிரபுடதேவமகாராஜன் இருந்த காலம் என்று ஆராய்ச்சி அறிஞர்கள் கருதுகின்றனர். அப்படியாயின் இவர் காலம் 15-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதி யென்று ஒருவாறு துணியலாம்.

அருணகிரியார் மனைவி மக்களோடும், தாய் தந்தையரோடும் இல்லறம் நடத்தியவராயினும், விதிவசத்தால் வேசியர் உறவு கொண்டு சிற்றின்பத்துறையில் எளியரானார். அதனால் பொருளெல்லாம் இழந்து வறுமையில் உழந்தார். இவருடைய கூடா ஒழுக்கத்தினால் பிணிவாய்ப்பட்டுத் துன்பம் அனுபவித்தார். இவைகளைப் பலப்பல பாடல்களில் மனம் நொந்து பாடுவது வெளிப்படை. "தாய் தமர் குலத்தர் யாவரும் நகைக்கவே யுடல் மங்குவேனை" என்றும், "மனையவள் நகைக்க ஊரினனைவருநகைக்க லோக மகளிருநகைக்க தாதை தமரொடும், மனமது சலிப்ப யாரும் வசை மொழி பிதற்றி நாளும் அடியேனை அனைவருமிழிப்ப" என்றும் கூறும் பகுதிகளால் இவர் நோய்வாய்ப்பட்டுக் காண்போர் அருவருக்கத் தக்க நிலையில் இருந்தார் என்பதில் ஐயமில்லை. தான் இழிந்த வழிகளால் துயருழந்ததை எண்ணியெண்ணி ஆண்டவனை நோக்கி மன்னிப்புக் கோரும் பாடல்கள் மனத்தை உருக்க வல்லன.

இவர் வில்லிபுத்தூராரோடு வாதுசெய்து வெற்றி பெற்றார் என்ற வரலாறு ஒன்றுண்டு. ஆனால் இவ்விருவரும் காலத்தால் ஒரு நூற்றாண்டு முன்பின்னாக இருந்தார்கள் என்று வரலாற்று நிபுணர்கள் கருதுகிறார்கள். ஆதலின் இதைப்பற்றி எதுவும் துணிந்து முடிவுக்கு வர இயலவில்லை.

இனி, இவர் கிளியுருவம் பெற்று விண்ணுலகம் சென்று பாரிஜாதம்கொண்டு வந்த செய்திக்கு அகச்சான்று ஒன்றுமில்லை. கந்தரநுபூதி, கந்தரலங்காரம், திருவகுப்பு இந்த மூன்று நூல்களையும் கிளியுருவில் பாடினார் என்று கூறப்படுகிறது. இந்த நூல்களை ஆராய்ந்தால் இவை கிளியால் பாடப்பட்டிருக்க முடியாதென்று அறியக்கிடக்கின்

றது. "விதிகாணும் உடம்பை விடா வினையேன்" என்றும், வளைபட்ட கைம்மாதொடு மக்களெனுந்தளையும், மட்டூர் குழல் மங்கையர் மையல் வலையும், என்றும் கூறும் கந்தரநுபூதிப் பகுதிகள் இளியுருவில் இவை பாடப் பட்டன அல்லவென்பதை வலியுறுத்தும்.

அருணகிரியார் சமயக் கொள்கைகளை பாடல்களில் வரும் குறிப்புக்களால் உணரலாம். "ஏழை நானுன் பதிபசு பாசோப தேசம் பெறவேணும்" என்று முப்பொருளுண்மையை ஒப்புக்கொள்கிறார். "ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவம் கண்டு" என்று பிரணவப் பெருமையைக் கூறுகிறார். "நமசிவயப் பொருளானே ரசதகிரிப் பெருமாளே" என்று பஞ்சாட்சரத்தின் பொருள் இறைவனே என்று சொல்கிறார். "ஆணவம் மாயை கருமமலங்கள் போயுபதேச குருபர சம்பரதாய மொடேயு நெறியது பெறுவேனோ" என்று மும்மலங்களின் ஒழிப்பை வேண்டுகிறார். "அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே" என்று கூறி, சிவஞான சித்தியாரில் "அறியாமை அறிவகற்றி அறிவினுள்ளே அறிவுதனை அருளினு லறியாதே அறிந்து" என்ற பாட்டின் கருத்துக்கு விளக்கம் கூறியிருப்பது பெரிதும் இன்புறற் பாலது. மேற்கூறியவைகளெல்லாம் சைவசித்தாந்தத்துள் கூறப்படும் முக்கிய கொள்கைகள். கூர்ந்து ஆராய்வார்க்கு இவர் அறுமுகச்சிவனரிடம் அழுந்திய பற்றுள்ள சைவசித்தாந்தி என்று தோன்றும். ஆனால் இவர் எம்மதமும் சம்மதம் என்ற பரந்த சமரச நோக்கமுடையவர். இராமாயணம், பாகவதம், பாரதம் இக்கதைகளின் நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகவும், அழகுபடவும் பலவிடங்களில் கூறியிருப்பது மிகவும் போற்றுதற்குரியது.

இவருடைய கவித்திறமையும், சந்தப்பா வன்மையும், எளிய சொற்களால் பாடும் நயமும், உயர்ந்த கருத்துக்களை யாவரும் உணரும்படி சொல்லும் தன்மையும், வடமொழியும் தென் தமிழும் கலந்து அழகுபட அமைத்துப் பாடும் பான்மையும் இவருடைய பாடல்களில் கவர்ச்சியைத் தருகின்றது. இதனாலன்றோ "வாக்கிற்கருணகிரி" என்ற பாடலும் எழுந்தது. தாயுமானவர், சிதம்பர சுவாமிகள், மார்க்க சகாயதேவர், பாம்பன் சுவாமிகள் இவர்கள் எல்லோரும் அருணகிரிநாதரை மிகமிகப் புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

இவர் பாடிய திருப்புகழின் தொகை 16,000, 36000 என்றெல்லாம் கற்பனையாகக் கூறப்படுகிறது. இதுவரை கிடைத்த திருப்புகழ்ப் பாடல்களின் தொகை 1361தான். அதிகமாகத் திருப்புகழ் பாடப்பெற்ற தலங்கள், பழநி, திருப்பரங்குன்றம், பழமுதிர் சோலை, திருவண்ணாமலை, காஞ்சிபுரம், சிதம்பரம், சுவாமிமலை, திருச்செந்தூர், திருத்தணிகை, வயலூர் முதலியன. இவைகளில் மிக அதிக பாடல்களுடையது பழநி. அதற்கு 95 பாடல்கள் அருளியுள்ளார்.

இவருடைய பாடல்களில் சிவபெருமான், பார்வதி, கணபதி, இந்திரன், பிரமன், மன்மதன், முருகன், வள்ளி, தெய்வயானை, மகாவிஷ்ணு இவர்களைபற்றிய குறிப்புக்கள் நிறைய இருக்கின்றன. இவர், எமன் எருமை ஏறி உயிரைப் பிடிக்கவரும் பயங்கரத் தோற்றத்தைப்பற்றிக் கூறும் இடங்கள் நம் கண் முன்னேகொண்டு வந்து காட்டும் காட்சிகளாகும். அறுமுகன் அடியவர்களுக்கு எம பயமில்லை யென்றும், அடியார் கூட்டுறவு நற்கதிக்கு உய்க்கும் என்றும், ஈகை மிகவும் அவசியம் என்றும், அது மறுபிறப்பில் உதவி செய்யும் என்றும், கொலை, வேள்வி வேண்டாம் என்றும், அன்புவழிபாடு வேண்டும் என்றும், பிழையறக் கல்வி கற்க வேண்டும் என்றும், செல்வம் வறுமை இந்த இரண்டு நிலைகளிலும் கடவுள் நினைவு வேண்டும் என்றும் இன்னும் பல அறிவுரைகளை அவருடைய பாடல்களில் கூறி யிருக்கிறார். அவருக்கு அதிகமான தமிழ்ப்பற்று உண்டு. "அம்புவி தனக்குள் வளர்செந்தமிழ் வழுத்தியுனை அன்பொடு துதிக்க மனம் அருள்வாயே" என்றும், "வள்ளியை வேட்டவன் முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்பான்" என்றும் கூறும் பகுதிகள் நோக்கத்தக்கவை.

ஆதலின் அருணகிரியார் அருளிய பாடல்களைப் பாடி அறுமுகச் செவ்வேள் அடிமலர் வணங்கிப் பேரானந்தப் பெருவாழ்வை அடைய நாம் எல்லோரும் முயற்சிப் போமாக.